# பிள்ளையார் காப்பாற்றினார்

ராஜாஜி





வானதி பதிப்பகம்
தி.நகர் - சென்னை-17

# பதிப்புரை.



மூதறிஞர் ராஜாஜி அவர்களின் சிறுகதைகள் சிந்தனையைத் தூண்டவல்லவை. சிறு சிறு சொற்களில் எளிய நடையில், அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில், அரிய பெரிய விஷயங்களைக் கதைவடிவில் சொல்வதில் மூதறிஞர் ராஜாஜி இணையற்றவர். இந்தச் சிறுகதைத் தொகுதி நான்காம் பதிப்பு வெளி வருவதிலிருந்தே ராஜாஜியின் கதைகளுக்கு மக்களிடையே எவ்வளவு மதிப்புள்ளன என்பதை அறியலாம்.

"பிள்ளையார் காப்பாற்றினர்" என்ற நூலை வானதி பதிப்பகத்தில் வெளியிடும் பாக்கியம் அருளிய மூதறிஞர் ராஜாஜி அவர்களின் கருணைக்கும், அவருடைய அருமைப் பிள்ளையான உயர்திரு சி. ஆர். நரசிம்மன் அவர்களுக்கும், இதனை வரவேற்கும் வாசகர்களுக்கும் நன்றி.

சென்னை-600017<br>27—7—79 

ஏ. திருநாவுக்கரசு,<br>வானதி பதிப்பகம்.

# பொருளடக்கம்.




# பிள்ளையார் காப்பாற்றினார்

சின்னப்பனும் அவனுடைய மகன் மாரியும் சேர்ந்தமங்கலம் காட்டுக்கு விறகு வெட்டிக்கொண்டு வர அதிகாலையில் புறப்பட்டுப் போனார்கள். மலையடி வாரம் போய்ச் சேர்ந்ததும், "சாமியைக் கும்பிட்டுப் போகலாம்" என்று சின்னப்பன் தன் மகனையும் கூட்டிக் கொண்டு அங்கே இருந்த ஒரு குளத்தங் கரைப் பிள்ளையார் அருகில் போய் நின்றான். அரி வாளையும் மற்ற சாமான்களையும் ஒரு பக்கத்தில் வைத்துவிட்டுக் குளத்தில் கைகால் கழுவிக்கொண்டு சந்நிதிக்கு வந்தான். தான் கொண்டு வந்திருந்த ஒரு தேங்காயை எடுத்து, "சாமி! நம்மைக் காப் பாற்றவேண்டும். சேவகன், கீவகன் யாரும் நம்மை வந்து பிடிக்காமல் இருக்க வேண்டும். ஆனை முகனே!" என்று சொல்லி விழுந்து கும்பிட்டுவிட்டுத் தேங்காயை உடைத்தான். ஒரு பாதியை விநாயகர் காலடியில் வைத்துவிட்டு மற்றொரு பாதியை எடுத்து உடைத்துச் சின்னப்பனும் மாரியும் சாப்பிட்டார்கள்.

"இந்தத் தேங்காயைக் கடையில் வாங்கினாயா?" என்று கேட்டான் மாரி.

"இல்லை! நேற்று ஐயா வீட்டில் மரம் ஏறிக் காய் தள்ளினேனல்லவா? அப்போது ஒரு காய் சாமிக் கென்று எடுத்து மறைத்து வைத்தேன்!" என்றான் சின்னப்பன்.

பிறகு மாரி, "ஒரு மூடி சாமியண்டை வைத்தாயே, அது என்னவாகிறது? அதையும் எடுத்துச் சாப்பிடலாமே?" என்ருன்.

"சீ! சீ! அது சாமிக்கு!" என்ருன் சின்னப்பன்.

"குரங்கு தின்றுவிட்டுப் போகும்" என்ருன் மாரி.

"குரங்கும் சாமிதானே!" என்ருன் சின்னப்பன்.

பிறகு எழுந்து மலைமேலிருக்கும் காட்டுக்குப் போனுர்கள். வழியில் பேசிக்கொண்டே சென்ருர்கள்.

"மூன்றணுத் துட்டு வைத்திருக்கிறேன். காட்டுக்குப் 'பாசு' எடுத்திருந்தால் அதற்கு ஒன்றரையணுக் கொடுத்திருக்க வேண்டும். நாம் பாரஸ்ட் சேவகன் கண்ணுக்கு அகப்படாமல் இருக்க வேண்டும். பிடித்துவிட்டால் அவனுக்கு மூன்றணுத் தந்துவிட்டுத் தப்பித்துக் கொள்ளலாம். அதிர்ஷ்டம் போல் நடக்கும். இந்த வழியாகப் போகக் கூடாது. இங்கே அந்தச் சேவகப் பாவிகளின் நடமாட்டம் அதிகமா யிருக்கும்!" என்று பேசிக்கொண்டே அடர்த்தியான காட்டில் செல்லும் வேருெரு மறைவுப் பாதையில் அப்பனும் மகனும் சென்ருர்கள்.

"யாராவது கண்டுவிட்டுப் 'பாசு' எங்கே என்று கேட்டால் நான் உன்னைக் கேட்பேன், 'ஐயையோ, வீட்டில் வைத்துவிட்டேன்!' என்று சொல்லிக் கூச்சல் போடு!"

இவ்வாறு மகனைச் சின்னப்பன் ஜாக்கிரதைப் படுத்தினுன். நடு மத்தியானம். காட்டிலிருந்து

விறகுச் சுமையுடன் திரும்பி வந்தார்கள். "சாமி! இதுவரையில் காப்பாற்றினய். அப்பனே! ஏழையை விட்டுக்கொடுக்காதே!" என்று பிள்ளையார் கோவிலண்டை இருந்த ஒரு மரத்தடியில் சுமையைச் சாய்த்து வைத்துச் சின்னப்பன் களைப்பாக உட்கார்ந்தான்.

பிறகு தாங்கள் கொண்டு வந்திருந்த மூட்டையை அவிழ்த்து அதில் வைத்திருந்த பழைய சோற்றை எடுத்து இருவரும் சாப்பிட்டுவிட்டு, விறகுச் சுமையை அவிழ்த்து ஒன்றைப் பெரியதாகவும் மற்றென்றைச் சிறியதாகவும் பிரித்து இரண்டாகக் கட்டினர்கள்.

கட்டிவிட்டு இருவரும் அங்கேயே சற்று நேரம் உட்கார்ந்திருந்தார்கள்.

களைப்பினல் சிறு பையன் தூங்கிப் போனன். தாகத்துக்குத் தண்ணீர் தேடிக் காட்டில் போன தாகத் தூக்கத்தில் கனவு கண்டான். காட்டிலாகாச் சேவகன் பார்த்து விட்டுத் துரத்தி வந்ததாகவும் கண்டான். அழுது கொண்டு ஓடியலைந்தான். திடீர் என்று எங்கிருந்தோ பிள்ளையார் வந்து அவனை எடுத்துத் தோள்மேல் வைத்துக் கொண்டு சேவகனுக்கு அகப்படாமல் கொண்டுபோய் அம்மனிடம் ஒப்புவித்தார்.

"இந்தப் பயலைப் பத்திரமாக வைத்துக்கொள், அந்தப் பாவி சேவகன் துரத்தி வருகிறன்!" என்று பிள்ளையார் தேவியிடம் சொன்னர். "சேவகன் இங்கே வந்து பிடித்துக்கொள்ளமாட்டானு?" என்

ருன் மாரி. "வந்தால் உதைத்துப் போடுவேன். நீ சும்மா இரு" என்ருள் தேவி. எல்லாமே கனவிலே நடந்ததுதான்.

பிறகு அம்மன் அவனைக் குளத்தில் குளிக்கச் செய்து உடம்பு எல்லாம் துடைத்து, "இந்தா தேங்காய்! சாப்பிடு!" என்று கொடுத்தாள்.

தேங்காய் தின்னப்போனபோது அவனை யாரோ பிடித்துத் தள்ளியதால் துள்ளி எழுந்தான். பாரஸ்ட் சேவகன் யமனைப்போல் எதிரே நின்ருன். அம்மன் மறைந்து போனுள். "ஐயோ!" என்று கத்தினுன் மாரி. "திருட்டுப் படவா! எடு பாஸை!" என்று சேவகன் சின்னப்பனை அதட்டிக் கேட்டான்.

"திருட்டு இல்லே, எஜமான்! மாரி! சீட்டை எடுத்து ஐயாவுக்குக் காட்டு" என்று சொன்னுன் சின்னப்பன்.

பிறகு முந்திப் பேசியிருந்த மாதிரி நாடகம் நடத்தினுர்கள். பாஸை வீட்டில் வைத்துவிட்டு மறந்து போனதாகச் சொன்னுன் மாரி.

பாரஸ்ட் சேவகன் இந்தக் கதையைக் கொஞ்சமும் நம்பவில்லை.

"ஏமாற்றப் பார்க்கிறீர்களா? ஆறு மாதம் ஜெயில்; நடங்கள்!" என்று இருவரையும் பிடித்துத் தள்ளி விறகுச் சுமைகளோடு பாரஸ்டு ஆபீசுக்கு அழைத்துச் சென்ருன்.

போகும் வழியில் சின்னப்பன், "சாமி! சாமி! நான் குற்றம் செய்துவிட்டேன்; மன்னித்துவிடுங்கள்!" என்று கெஞ்சினுன்.

"திருட்டுப்பயலே! மன்னிப்பாவது, ஒன்ருவது? ஜெயில்தான், நட!" என்ருன் சேவகன்.

"இல்லேங்கோ, சாமி!—கடவுளே! இதை வைத்துக்கொள்ளுங்கள். எப்படியாவது காப்பாற்றுங்கள், நான் ஏழை!" என்று சொல்லிக்கொண்டே சின்னப்பன் தன்னுடைய மடியில் வைத்திருந்த மூன்று அணவை எடுத்து நீட்டினன். பாரஸ்ட் சேவகன் சிரித்தான்.

"என்ன, லஞ்சம் கொடுக்கிருயா! அந்தக் காலம் எல்லாம் போச்சு. சுயராஜ்யம் வந்துவிட்டது; உனக்குத் தெரியாதா?" என்ருன். "தெரியவில்லேங்கோ ஐயா! எப்படியாவது காப்பாற்றுங்கள். உங்களுக்கும் பிள்ளை குட்டி உண்டு. ஜெயிலுக்கு நான் போனல் என் பெண்சாதி குழந்தைகளை யார் காப்பாற்றுவார்கள்?" என்று சின்னப்பன் அழுதான்.

"படவாப் பயலே! பணத்தை எடுத்து வை. வா, ஆபீசுக்கு. ஒன்றரை அணச் சீட்டுக் கொடுக்கிறேன். மறுபடி இந்த மாதிரி திருட்டுத்தனம் செய்யாதே!" என்ருன். ஆபீசுக்குப் போய்ச் சீட்டு எழுதிய பிறகு அப்பனும் மகனும் விறகுச் சுமைகளோடு ஊருக்குச் சென்ருர்கள்.

"பிள்ளையார் காப்பாற்றினர்!" என்று சின்னப்பன் நடந்ததையெல்லாம் மனைவிக்குச் சொன்னன்.

"அம்மா! சேவக ஐயா ரொம்ப நல்லவர்" என்ருன் மாரி.

அன்று மாலை ராசிபுரம் சென்று விறகை விற்ருர்கள். பெரிய சுமையை ஆறு அணவுக்கும் சின்னச்

சுமையை இரண்டரையணுவுக்கும் விற்ருர்கள். விற்று விட்டு ஊருக்குத்திரும்பினுர்கள். வழியில் கள்ளுக்கடை இருந்த இடத்தில் சின்னப்பன் ஒரு நிமிஷம் நின்ருன். அங்கே குட்டிச்சுவர்தான் இருந்தது. கடையை எடுத்துப் போட்டு இரண்டு வருஷம் ஆன போதிலும் சின்னப்பனுக்குக் கள்ளின் ஞாபகம் போகவில்லை. சிறிது நேரம் பழைய காலத்தை நினைத்துச் சும்மா நின்று கொண்டிருந்து விட்டுச் சின்னப்பன் வீடு திரும்பினுன். காசை மனைவியிடம் கொடுத்தான்.

“கள்ளுக்கடை இருந்தால் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த காசு வீட்டுக்கு வருமா? பிள்ளையார்தான் காப்பாற்றினுர்!” என்ருள் அவன் மனைவி.

# ‘தண்ணிப் பால்’

மந்தைவெளி கீழத் தெரு ராதாகிருஷ்ணப் பிள்ளை வீட்டில் ஆரவாரம்.

புதிதாக வாங்கிவந்த சிந்திப் பசு கன்று போட்டு விட்ட மகிழ்ச்சி. காளைக்கன்று, கண்ணைக் கவரும் அழகு. குழந்தை கோபாலு துள்ளிக் குதித்து ஒரே குதூகலமாகக் கூத்தாடினன்.

ராதாகிருஷ்ணன் மூன்று கறவைப் பசுக்களை வைத்துக் கொண்டு மயிலாப்பூரில் பால் விற்று, சந்தோஷமாய் ஜீவனம் நடத்தி வந்தான். முந்நூறு ரூபாய்க்கு வாங்கிய சிந்திப் பசுவும் பால் நிறையக் கொடுத்து வந்தது.

⁂ ⁂ ⁂

நான்கு மாதங்களுக்குப்பின் ஏனோ தெரியவில்லை. பசு கொஞ்சம் இளைக்க ஆரம்பித்தது. பால் குறைந்து விட்டது. கன்றுக்குட்டியும் வரவர இளைத்துப்போய் ஒன்றுக்கும் பயன்படாது என்று தீர்மானித்து விட்டார்கள்.

ராதாகிருஷ்ணனும் அவன் மனைவியும் துயரத்தில் மூழ்கினர்கள். பசுவுக்காக வாங்கிய கடன் தீரவில்லை. முதலாளி தொந்தரவு அதிகமாயிற்று. செட்டியார் நல்லவர். ஆனல் அவர் என்ன செய்வார்?

"பசு இளைத்துப் போய்விட்டது. சரியாகப் பால் கறக்கவில்லை" என்றாள் ராதாகிருஷ்ணன் மனைவி.

"தீனி சரியாயில்லை போலிருக்கிறது. எப்படி யானாலும் இதற்கு நான் என்ன செய்வேன்? உங்கள் அதிர்ஷ்டம்! நான் பாங்கியில் பணம் கட்ட வேண்டும்" என்றார் செட்டியார்.

"எங்கள் அதிர்ஷ்டம்தான், உண்மை. நீங்கள் என்ன செய்வீர்கள்! ஆனாலும் கொஞ்சம் தயவு செய் யுங்கள். இப்போது ரொம்பக் கஷ்டமாக இருக் கிறது" என்று கெஞ்சினான் ராதாகிருஷ்ணன்.

* * *

ஆறாவது மாதம் ஒரு சாயபு வந்து கன்றுக் குட்டியைப் பார்த்துவிட்டு ராதாகிருஷ்ணனிடம் பேரம் பேசிக்கொண்டிருந்தான். குழந்தை கோபாலு வும் தாயாரும் கொஞ்சம் எட்டி, தூரத்தில் நின்றார்கள்.

"ஐந்து ரூபாய்க்குமேல் கொடுக்க முடியாது" என்றான் சாயபு.

"அப்படிச் சொல்லவேண்டாம்; பத்து ரூபா யாவது கொடுங்கள்" என்றான் ராதாகிருஷ்ணன்.

"ஐயோ, முடியாது. தோல் கிராக்கி ரொம்பக் குறைந்து போச்சு" என்றான் முஸ்தபா சாயபு.

"சரி, ஏழு ரூபாய் கொடுங்கள்" என்று சொல் லிப் பேச்சை முடித்தான் ராதாகிருஷ்ணன்.

ராதாகிருஷ்ணனுடைய மனைவியின் கண்களில் நீர் வடிந்தது. "கெட்ட காலம் இப்படி வந்து

சூழ்ந்து கொண்டதே" என்று அவள் துயரப் பட்டாள்.

"கன்றுக் குட்டியைக் கொடுத்துவிடாதே, அப்பா!" என்றான் கோபாலு. கன்றைத் தடவித் தடவி முத்தமிட்டான். குழந்தைகளின் உலகமே வேறு. பசுவும் கன்றை நக்கிக் கொடுத்துக்கொண்டிருந்தது. ஓரொரு சமயம் கூடவே கோபாலுவையும் நக்கும். உவர்ப்புக்காகப் பசுக்கள் இவ்வாறு நக்கும் என்று பசு டாக்டர்கள் சொல்லுகிறார்கள். இருக்கலாம். ஆனால் இந்த 'விஞ்ஞான' சமாதானம் எனக்குப் பிடிக்கவில்லை.

மறுநாள் முஸ்தபா சாயபு வந்து ரூபாய் கொடுத்து விட்டு, கன்றுக் குட்டியைப் பிடித்துப் போய்விட்டான். அன்று வீட்டில் யாரும் பேசவில்லை. பெரும் பாவம் செய்துவிட்ட உணர்ச்சி புருஷன் மனைவி இருவருக்கும். "மாரியாயி! நீதான் எங்களைக் காப்பாற்றவேண்டும்!" என்று மனதுக்குள்ளே சொல்லி வேண்டிக்கொண்டாள் ராதாகிருஷ்ணன் மனைவி.

பசு இங்குமங்கும் ஏங்கிப் பார்த்து, ஒரு புதுக் குரலில் கத்த ஆரம்பித்தது. கண்களில் கோபமும் குழப்பமும் தாண்டவமாடிற்று. ராதாகிருஷ்ணன் சமாதானப்படுத்த முயன்றான். ஆனாலும் அதன் பதட்டம் அடங்கவில்லை. என்னவென்னவோ செய்து பார்த்தார்கள். பால் கறக்கவே முடியவில்லை.

கஷ்டமும் கவலையும் பெருந்தொகை போட்டு வாங்கிய பசுவின் மூர்க்கத்தனமும் எல்லாம் ஒன்று சேர்ந்ததில் ராதாகிருஷ்ணன் உள்ளம் துடித்தது.

கடவுளை நிந்தித்தான். ஒரு முறத்தில் தவிடு வைத்துக் கொண்டு பசுவண்டை மெதுவாகப் போனன். சும்மா இருப்பதுபோல் இருந்து பசு திடீர் என்று தலையைத் தாழ்த்திற்று. ராதாகிருஷ்ணன் தூர விலகிப் போவதற்குள் அவனை முட்டித் தள்ளி விட்டது.

“ஐயோ! என்று கதறிக்கொண்டு ராதாகிருஷ்ணன் கீழே விழுந்து புரண்டான். ரத்தமும் பெருகிற்று. துடையில் பலமான காயம். மனைவியும் கதறினள்.

தகப்பன் விழுந்து புரளுவதைப் பார்த்து ஆவேசமாகக் கோபாலு அங்கிருந்த ஒரு மூங்கில் குச்சியை எடுத்துப் பசுவை பட் பட் என்று அடித்தான். பசுவோ கோபம் தணிந்து கோபாலுவின் தலையை நக்க ஆரம்பித்தது. தான் செய்த தவற்றை உணர்ந்த மாதிரியே அதன் கண்களில் நீர் ததும்பிற்று.

ராதாகிருஷ்ணனின் மனைவி அவன் காயத்துக்கு ஒரு பழந்துணியைக் கிழித்துக் கட்டி ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்ருள். காயம் சீக்கிரமாகவே சொஸ்தப்பட்டது.

* * *

“கொஞ்ச நாளுக்குப் பிறகு, பாவம், சிந்திப் பசு பழையபடி சாதுவாகப் போயிற்று. கன்றை மறந்துவிட்டு, கன்றில்லாமலே ஓரளவு பால் தரச் சம்மதித்தது, கோபாலு, தவிடு வைத்துக்கொண்டு பக்கத்தில் நிற்பான். அவன் நின்ருல்தான் பால்

சுரக்கும். ஆனல் முன்னளவு இல்லை. அது இயற்கையின் வேலை, பசுவைக் குற்றம் சொல்லுவதற்கில்லை.

இரண்டு மாதம் கழித்து ராதாகிருஷ்ணன் பசுவை வேலூருக்குக் கொண்டுபோய் ரூ 200-க்கு விற்றுவிட்டுச் செட்டியாருக்குக் கட்டிவிட்டான். இன்னும் கொஞ்சம் கடன் பாக்கிதான். அதற்கு என்ன செய்கிறது?

※ ※ ※

"இப்போதெல்லாம் பாலில் ஏன் இப்படித் தண்ணீர் சேர்த்து ஊரைப் பாழாக்குகிறார்கள்?" என்றார் வக்கீல் இரத்தினசபாபதி தம் குமாஸ்தாவிடம்.

"ஆமாம்; எல்லாரும் கெட்டுப் போனர்கள்" என்றார் குமாஸ்தாவும்.

வாசலில் ராதாகிருஷ்ணன் ஒரு மயிலை நிறப் பசுவைப் பிடித்து, பால் கறந்து கொடுக்கக் காத்திருந்தான். வீட்டு எஜமானி வருவதற்காகக் காத்துக்கொண்டிருந்தான். பக்கத்தில் கோபாலுவும் ஒரு பித்தளைத் தகடு பாத்திரம் வைத்துக்கொண்டு நின்றான். பாத்திரத்தைத் தலைகீழாகத் திருப்பி வீட்டுக்காரி அம்மாவுக்குக் காட்டிய பிறகுதான் பால் கறக்க வேண்டும். ஆனலும் அந்த அம்மாளின் சந்தேகம் தீராது.

வக்கீல் இரத்தின சபாபதிக்குத் தண்ணீர்ப் பால் கலந்த காப்பி பிடிப்பதில்லை. மனைவியைக் கோபிப்பார் சில சமயம், "இந்தப் பால்காரர்களைக் கண்டிக்க ஏன் சர்க்கார் கடுமையான சட்டம் செய்ய மாட்டேன் என்கிறார்கள்!" என்பார்.

அவரவர்கள் கஷ்டம் அவரவர்களுக்குத்தானே தெரியும்?

# டாக்டர் ஆரோக்கியம்

“இனி ஒருநாள் தவணைகூடக் கொடுக்க முடியாது” என்றார் சேட்பன்ஸிலால்.

“உங்களுக்காக நான் எவ்வளவு பாடு பட்டிருக்கிறேன்? திடீரென்று இவ்வளவு பெரிய தொகை தரச் சொன்னால், நான் ஏழை, எங்கிருந்து கொடுப்பேன்?” என்றார் டாக்டர் பால்ஆரோக்கியம்.

மீண்டும் அவர், “ஏதோ கெட்ட வேளையில் புத்தி தவறிப்போய்த் தப்பிதம் செய்துவிட்டேன். மன்னித்து விடுங்கள். உங்களை ஆண்டவன் காப்பாற்றுவான் உங்களுக்கு ஒரு குறையுமில்லை. சுவாமி வேண்டிய தனம் கொடுத்திருக்கிறார். இன்னும் கொடுக்கப் போகிறார். உங்களுக்கு இது ஒரு பெரிய விஷயமல்ல” என்று கண்கள் சிவந்து மிகப் பரிதாபமாக வேண்டிக் கொண்டார்.

“சுவாமியாவது, பூதமாவது!” என்று உரத்த குரலில் சேட்டு கத்தினார். “நம்பின ஆளை மோசம் செய்து விட்டுப் பன்னிரண்டு மாதங்களாகப் படுபொய் சொல்லி என்னுடைய பணத்தைத் திருடி விட்டு இப்போது சுவாமி பேர் சொல்லுகிறீரா? மோசம் செய்யும் போதெல்லாம் சுவாமி எங்கே போனார்? ஐந்து வருஷம் பந்திகானாவில் இருந்து விட்டுப் பிறகு

சுவாமிக்குப் பூஜை செய்யும். இதுவே கடைசி வார்த்தை. வெள்ளிக்கிழமைக்குள் பணம் நாலாயிரம் ரூபாயும் வைத்து மன்னிப்புக் கேட்டால் ஆச்சு, இல்லாவிட்டால் போலீசார் நடவடிக்கை எடுப்பார்கள்" என்று சொல்லிவிட்டுச் சேட்டு போய் விட்டார்.

* * *

டாக்டர் பால் ஆரோக்கியத்துக்கு அவருடைய தாய் தகப்பனர் இட்ட பெயர் வைத்தியநாதன். இவரை ஞான ஸ்நானம் செய்வித்த பாதிரியார் தம் முடைய பெயரில் ஒரு பகுதியையும், வைத்தியநாத னுடைய பெயரைக் கொஞ்சம் மாற்றி அமைத்து அதையும் சேர்த்துப் பால் ஆரோக்கியம் என்று நாம கரணம் செய்தார். கிறிஸ்துவப்பள்ளியில் கொஞ்ச காலம் படித்து மெட்ரிகுலேஷன் பரீட்சை தேருமல் கல்கத்தாவிலும் பம்பாயிலும் வேலைக்காக அலைந்து பிறகு சூட்சுமப் பிரயோக முறை—அதாவது ஹோமி யோபதி சிகிச்சை கொஞ்சம் கற்றுக்கொண்டு டாக்டர் ஆரோக்கியம் காசியில் அந்தத் தொழில் செய்து வந்தார். ஆனல் வருமானம் ஒன்றும் சரியாகக் கிடைக்கவில்லை. பக்கத்துத் தெருவில் ஒரு ஜவுளி வியாபாரியுடன் சிநேகம் செய்துகொண்டு அவ ருக்காகப் பெங்களூரில் தமக்குத் தெரிந்த வியாபாரி களிடமிருந்து புடவை தினுசுகள் தருவித்துக் கொடுத்து வந்தார். குடிப் பழக்கத்தில் சிக்கிவிட் டிருந்தபடியால் முதலாளியிடம் வாங்கிய பணத்தை ஆசாமிகளுக்குச் சரியாக அனுப்பாமல் செலவு செய்து வந்தார். இவ்விதம் இரண்டு வருஷங்களாகக்

கையாண்டது பெருந்தொகையாகிவிட்டது. சேட்டுக்கு விஷயம் தெரிந்து போய்விட்டது.

சேட் பன்ஸிலாலுக்கு போலீஸ் அதிகாரிகள் ரொம்ப வேண்டியவர்களாயிருந்தனர். அவர்களுடன் யோசனை செய்தார். கேசு போட்டால் ஆள் ஜெயிலுக்குப் போய்விடுவான். பணம் வராது என்று அவருக்கு விளங்கிற்று. கேசு தாக்கல் செய்யாமலேயே ஆசாமியை மிரட்டிப் பணம் வாங்கவேண்டும் என்று போலீசாருடன் கலந்து அவர்களும் இவருமாகத் தீர்மானித்து அதற்கு வேண்டியதைச் செய்தார்கள். வியாழக்கிழமை பிற்பகலில் ஒரு போலீஸ் அதிகாரி டாக்டர் ஆரோக்கியத்தினுடைய வீட்டிற்கு வந்து டாக்டர் இருக்கிறாரா என்று விசாரித்து விட்டுத் திரும்பிப் போனார். சிறைச்சாலை நிச்சயம் என்று டாக்டர் ஆரோக்கியம் தீர்மானித்துக்கொண்டார். சாய்வு நாற்காலியில் சாய்ந்து படுத்தவர், அவருடைய வாழ்க்கை முழுதும் துரதிர்ஷ்டமாகவே நடைபெற்றதை எண்ணி எண்ணிக் குழந்தைபோல் அழுதார். சிறுவயதில் தாயார் இறந்ததும், தகப்பனார் மறு கல்யாணம் செய்துகொண்ட மனைவியிடம் தான் பட்ட துயரங்களும், வீட்டை விட்டு ஓடிப்போனதும், திருக்கோயிலூரில் கிறிஸ்து மதத்தில் சேர்ந்துவிட்ட பின் பாதிரிமார்கள் தம்மைக் காப்பாற்றியதும், பிறகு அவர்களும் தம்மைத் துரத்திவிட்டதும், புதுச்சேரியிலும், பம்பாயிலும், கல்கத்தாவிலும் படாத பாடெல்லாம் பட்டு அலைந்ததும், இன்னும் பல நிகழ்ச்சிகளும் சினிமாப் படம்போல் வேகமாகவும் முன் பின்னாகவும் மனத்திலே இயங்கின. கொஞ்ச நேரம் தூங்கினார்.

"ஏன் அழுகிருய்?" என்று கேட்டுக்கொண்டு ஆனைமுகக் கடவுள் பிரசன்னமானதாகக் கனவு கண்டார். விநாயகருடன் எப்படியோ அவருடைய அக்கா பாலம்மாளும் கனவில் தோன்றிப் பரிதபித்ததாகக் கண்டார். ஒரு சமயம் அவளும், ஒரு சமயம் பிள்ளையாருமாகக் கனவு இயற்கைப்படி மாறி மாறி வந்து நின்று, "அழாதே, அழாதே, எல்லாம் சரியாகப் போகும்!" என்று சொன்னர்கள். அவரும் சிறு பையனாகக் கொஞ்ச நேரம் துக்கம் தீர்ந்த நிலையிலிருந்தபோது திடீர் என்று சேட்டும் மாற்ருந்தாயும் ராட்சதத் தோற்றமாக வந்தார்கள். உடனே நினைவு வந்து எழுந்து உட்கார்ந்தார். விடியற்காலம். யாரோ வாசற் கதவு தட்டின சத்தம் கேட்டது.

போலீஸார்தான் என்று தீர்மானித்துக் கொண்டார். பிறகு இது வெள்ளிக்கிழமை அல்லவே என்று தைரியம் செய்துகொண்டு எழுந்து கதவைத் திறந்து யார் என்று விசாரித்தார்.

* * *

"நீங்கள் வைத்தியம் பார்த்துச் சுகப்படாமல் இறந்துவிட்டார் என்று ஒரு சீட்டு எழுதித் தந்தால் போதும். இந்த ரூ. 5000 உங்களுடையது" என்ருர் சிவசுப்பிரமணிய அய்யர்.

"அய்யரே! நீங்கள் சொல்லுவது சரியே. ஆனல் இதில் பல சிக்கல்கள் வந்து சேருமோ என்று சந்தேகமாயிருக்கிறது. இதில் கைவைக்க முடியாது" என்ருர் டாக்டர் ஆரோக்கியம்.

"ஒரு அபாயமுமில்லை, டாக்டர்வாள்! நீங்கள் யோசிக்கவே வேண்டாம், நானும் தமிழன்; நீங்களும் தமிழன். உங்களை நான் ஒரு அபாயத்திலும் சிக்க வைக்கமாட்டேன். விஷயங்களை உண்மையாகச் சொல்லியிருக்கிறேன். ஒன்றும் மறைக்கவில்லை, பெரிய மனது செய்து உதவுங்கள்" என்றார் சிவசுப்பிரமணிய அய்யர்.

சிவசுப்பிரமணிய அய்யர் டாக்டர் பால் ஆரோக்கியத்திடம் சொன்னதாவது:—"அவரும் வயோதிகரான அவர் மாமனரும் யாத்திரைக்குப் புறப்பட்டுப் பத்திரி முதலிய ஸ்தலங்களுக்குப் போய்விட்டுக் காசிக்கு வந்து சேர்ந்தார்கள். அவ்விடம் செட்டியார் சத்திரத்தில் தங்கினார்கள். மாமனருக்கு வழியில் வந்த சுரம் தணியவில்லை. புதன்கிழமை இரவு இறந்து விட்டார். எட்டு நாளாகச் சுரம் அடித்தது. விருத்தாப்பியமும் குடும்பத்தில் ஏற்பட்ட துக்கங்களும் சேர்ந்து கிழவனர் உயிரைப் புண்ணிய ஸ்தலத்தில் பரமபதம் அடையச் செய்தன. ஒரு வருஷமாகவே அவர் உடல்நலம் சரியாக இருக்கவில்லை. மரண சாசனமும் எழுதி ரகசிய ரிஜிஸ்தரும் செய்து வைத்திருந்தார். அதன் பிரதி அவருடைய பையில் வைத்திருப்பதை நான் பார்த்தேன். இறந்த பிறகுதான் பார்த்தேன். அதன்படி தன்னுடைய நிலங்களைக் குடும்ப சம்ரக்ஷணைக்கு வைத்துவிட்டு ரொக்கச் சொத்தைத் தன் மகளுக்கு—அதாவது என் மனைவிக்குப் போகவேண்டியது என்று ஒரு நிபந்தனையுடன் எழுதி வைத்திருக்கிறார். தன் உயிர் போவதற்குள் என் மனைவிக்கு ஆண் குழந்தை பிறக்க வேண்டும் என்பது

நிபந்தனை. இல்லாவிட்டால் தன் ஆண் வாரிஸுக்குப் போக வேண்டியது என்று எழுதியிருக்கிறார். டாக்டர்வாள்! உங்களிடம் மறைக்காமல் உண்மை சொல்லுகிறேன். எனக்குப் ஒன்றன்பின் ஒன்றாகப் பெண் குழந்தைகளே மூன்று பிறந்தன. நான் ஊரை விட்டுப் புறப்பட்டபோது என் மனைவி ஏழு மாதம் கர்ப்பினி. இன்று பகல் பத்து மணிக்கு ஒரு தந்தி வந்தது. இன்று காலை ஆண் குழந்தை சுகப்பிரசவம் ஆயிற்று என்று. இந்தப் பிரசவம் நேற்று இரவு மாமனார் பரமபதமடைவதற்கு முன் நிகழ்ந்திருந்தால் சொத்து மிஞ்சியிருக்கும். இப்போது அது யாரோ ஒருவனுக்குப் போகும். எங்களுக்கு தெரியப்படுத்தாமல் அவசரப்பட்டுக் கன்னாபின்னா என்று சரியாக யோசிக்காமல் உயில் சாசனம் எழுதி ரிஜிஸ்தரும் செய்துவிட்டார். இதற்கு வேறு வழி இல்லை யாரோ தயாதி ஒருவனுக்குப் போய்விடாமல் சொத்தைக் காப்பாற்றுவது உங்கள் கையில் இருக்கிறது. கிழவர் நேற்றிரவு இறந்தாலென்ன, இன்று காலை இறந்தாலென்ன? காசியில் நம் உறவினர் வேண்டியவர்கள் யாருமில்லை. இன்று காலை இறந்தால் சொத்து சின்னாபின்னமாகப் போகாமல் தப்பும். நீங்கள் தமிழர் என்று அறிந்து உங்களிடம் சரண் புகுந்தேன். பிரேதம் இன்னும் தகனம் செய்யப்படவில்லை. ஹனுமான் கட்டத்தில் இன்று செய்துவிடப் போகிறேன். நீங்கள் வைத்தியம் பார்த்து இன்று மத்தியானம் இறந்து போனதாக எனக்கு ஒரு சீட்டு எழுதித் தந்தால் போதும். இதில் நீங்கள் யாருக்கும் எந்தத் தீமையும் செய்தவராகமாட்டீர். உங்களுக்கு

இதோ இந்த ரூ. 5000 நோட்டாகக் கொடுக்கிறேன். இதைப் பெற்றுக்கொண்டு எனக்கு ஒரு வெற்றுக் காகிதக் கடிதம் எழுதித் தந்துவிடவும். நானும் அதை அனுசரித்து ஊருக்கு ஒரு தந்தி அனுப்பி விடுகிறேன். நீங்களும் ஹனுமான் கட்டத்துக்கு இன்று மாலே வந்து தகனக்கிரியை நடப்பதைப் பார்த்து விட்டு என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்றூர் சிவ சுப்பிரமணிய அய்யர்.

விநாயகப் பெருமானே தம் கஷ்டத்தைத் தீர்க்க இம்மாதிரியெல்லாம் செய்திருக்கிருர் என்று பால் ஆரோக்கியம் எண்ணிஞர். பாழும் சேட்டின் தொல்லே தீர்ந்துவிட்டது. அவருக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துவிட்டு மீந்த பணத்துடன் தென்னுட்டுக்கே போய் எப்படியோ பிழைக்கலாம் என்று தீர்மானித்தார். இனி மதுபானம் வேண்டாம் என்றும் நிச்சயம் செய்து கொண்டார். இதில் பொய்யும் அதிகமாக இல்லே. நேற்று இறந்தால் என்ன இன்று காலே இறந்தால் என்ன? மகளுக்குப் போக வேண்டிய சொத்துத்தானே? இது நியாயமாகவே இருக்கிறது என்று மனதில் நிச்சயம் செய்து கொண்டு, "கொஞ்சம் யோசிக்கவேண்டிய விஷயம்; அவகாசம் கொடுங்கள். பிறகு இருட்டினதும் வாருங்கள், சொல்லுகிறேன்" என்ருர் டாக்டர்.

"வேண்டாம்! ஒன்றும் யோசிக்க வேண்டாம். தகன காரியம் இனித் தாமதிக்க இடமில்லே. இதில் ஒரு மோசமும் இல்லே. இதோ இன்னெரு ஆயிர ரூபாய் நோட்டு. இந்த ரூ 6000 வைத்துக்கொள்ளவும்" என்று நோட்டுக்களே டாக்டர் கையில் பலவந்த

மாக மடக்கி வைத்து, பேனாவும் கடுதாசியும் எடுத்து நீட்டினார் சிவசுப்பிரமணியஅய்யர்.

டாக்டர் ஆரோக்கியமும் பணத்தைப் பெற்றுக் கொண்டு உள்ளே போய் பெட்டியில் வைத்துவிட்டுத் திரும்பி வந்து பேசாமல் பேனாவை எடுத்துக் காகிதத்தில் எழுத உட்கார்ந்தார்.

"உங்கள் பெயர் என்ன?"

"சிவசுப்பிரமணிய அய்யர்."

"சிவசுப்பிரமணிய அய்யர் என்ற தஞ்சாவூர் பிராமணர். அவருடைய மாமனாருடன் காசிக்கு வந்து யாத்திரையில் கிழவருக்குக் கண்ட சுரத்துக்கு என்னிடம் சிகிச்சை செய்து வைத்தார். சுரம் தணியவில்லை. விருத்தாப்பியத்தின் காரணம் மருந்து பலிக்கவில்லை. இன்று காலை 10 மணிக்கு இறந்துவிட்டார். சிவசுப்பிரமணிய அய்யர் கேட்டுக்கொண்டபடி இந்த அத்தாட்சிச் சீட்டு எழுதித் தரப்பட்டது" என்று எழுதித் தந்துவிட்டார்.

சிவசுப்பிரமணிய அய்யர் டாக்டர் பால் ஆரோக்கியத்துக்குச் சாஷ்டாங்க தண்டனிட்டு நமஸ்காரம் செய்தார். "மாலை சுமார் 6 மணிக்கு ஹனுமான் கட்டத்துக்கு வரவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

டாக்டர் பால் ஆரோக்கியம் சேட்டுக்குத் தர வேண்டிய பணத்தைத் தந்துவிட்டுத் ரசீதும் பெற்றார்.

"இனி திருட்டு வேலையை விட்டுவிடுங்கள். உங்களை மன்னித்தேன்" என்றார்கள் சேட்டுவோடுகூட இருந்த போலிசு இன்ஸ்பெக்டரும். திரும்பி வீட்டுக்கு

வரும்போது அன்று விநாயகசதுர்த்தித் திருவிழா. ஒருகடையில் விநாயகமூர்த்தி ஒன்றை வாங்கிக் கொண்டு வந்து சேர்ந்தார். கிருஸ்துவ மதத்தை மனதில் தள்ளிவிட்டு விநாயக சமோதராய்விட்டார். விளக்கேற்றி மூர்த்திக்கு முன் பக்தி பரவசமாகப் பூஜை செய்து மாலை புஷ்பம் சமர்ப்பித்து, "ஆண்ட வனே! என்னை ரஷித்தாய். இனி நான் உன் அடிமை!" என்று தியானத்தில் ஒரு நிமிஷம் ஆழ்ந்தார். மாலை ஹனுமான் கட்டத்துக்குச் சென்று சுவசுப்பிரமணிய அய்யருடன் சேர்ந்து கொண்டார். அவருடைய மாமனாரின் உடலை, 'இதுவல்லவோ என்னை ஆபத்தி லின்று ரக்ஷித்தது!' என்று பார்க்க ஆவல் கொண்டு நெருங்கிப் போய்ப் பார்த்தார்.

பால் ஆரோக்கியம் திடுக்கிட்டார்! தன் தகப்ப னார் சாயலாக இருந்ததாய் எண்ணினார். மறுபடியும் உற்றுப் பார்த்தார். தகப்பனார்தான். சந்தேகமே யில்லை! ஆனாலும் தகப்பனாருக்கு இரண்டு வேலி நன்செய் இருந்ததே தவிர சொத்து ஒன்றும் பிரமாத மாக இருக்கவில்லையே என்று சந்தேகம் தீராமல் நின்றார்.

கிரியை எல்லாம் அவசரமாகவே முடிந்தது. கங்கைக் கரையில் நடைபெறும் கிரியைகளைப்பற்றித் தெரியுமே! சிவசுப்பிரமணிய அய்யரைத் தம் வீட்டுக்குக்கூட வரும்படி சொன்னார்.

"இல்லை. சத்திரத்தில் இன்னும் சில கிரியைகள் சரியாகப் பிராமணர்களைக் கொண்டு செய்துவிட்டு நாளைக் காலையில் வருகிறேன்" என்றார் ஐயர்.

சிவசுப்பிரமணிய அய்யர் விஷயங்களை விவரமாகச் சொன்னார். உயில் சாசனத்தின் பிரதியையும் காட்டினார்.

"சீர்காழி தாலுக்கா காட்டு முனியப்பன் கோயில் கிராமம் மகாதேவய்யர் மகன் சாம்பசிவ அய்யர் எழுதி வைத்த உயில் சாசனம். என்னுடைய முதல் மனைவியின் வழி பிறந்த மகன் வீட்டை விட்டு ஓடிப் போய் முப்பது வருஷங்களாயின. என் இரண்டாம் மனைவி பெற்ற ஆண் குழந்தை அம்மை வார்த்து இறந்து போயிற்று. என் மூத்த மனைவி மூலம் உண்டான பெண் பாலம்மாள் மிராசுதார் சிவசுப்பிரமணிய அய்யருக்கு விவாகம் செய்து கொடுக்கப் பட்டுச் சுகமாக இருக்கிறாள். அவளுக்கு யாதொரு குறையுமில்லை. என்னுடைய இரண்டு வேலி நிலம் என் இரண்டாம் மனைவி கௌரி அம்மாளுக்குச் சேர வேண்டியது. நான் யுத்த கண்டிராக்டு செய்து சம்பாதித்த ரொக்கம் பாங்கியிலிருக்கிறது. இரண்டு லக்ஷம் சொச்சம் ரூபாய். அதில் என் செலவுக்கு நான் அவ்வப்போது எடுத்துக் கொண்டது போக மிஞ்சியுள்ள தொகை முழுதும் எனக்குப் பின் என் ஆயுள் தீருமுன் மேற்கண்ட என் மகள் பாலம்மாளுக்கு ஆண் குழந்தை பிறந்தால் அந்தக் குழந்தைக்குச் சேர வேண்டியது. அவன் எனக்குக் கருமம் செய்ய வேண்டியது. என் ஆயுளுக்குள் அவளுக்கு ஆண் குழந்தை பிறக்காமற் போனால் இந்த ரொக்கச் சொத்து மனுஸ்மிருதிப்படி என் ஆண் வாரிசுக்குச் சேர வேண்டியது. அதாவது வீட்டைவிட்டு ஓடிப் போன என் மகன் ஒரு வேளை திரும்பி வந்தானானால்

அவனுக்குச் சேரவேண்டியது. அல்லது என் தாயாதிகளில் யார் என் மரண காலத்தில் நெருங்கியவரோ அவருக்குச் சேர வேண்டியது. இந்த உயில்... தேதியில் ரகசிய ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது."

டாக்டர் ஆரோக்கியம் ஒன்றும் பேசவில்லை சிவசுப்பிரமணிய அய்யரும் திரும்பிப் போய்விட்டார்.

"எல்லாம் அக்கா பாலுவுக்குத்தானே போகிறது? நான் ஏமாந்தது உண்மையே. ஆனால் இதில் என்ன வருத்தம்?" என்று விநாயகமூர்த்தியைத் தியானித்தார் பால் ஆரோக்கியம்.

✻ ✻ ✻

"தம்பி! திரும்பி வந்தாயா? உன்னைப் பார்த்ததும் அப்பா இறந்து போன துக்கத்தையும் மறந்து விட்டேன். வைத்தி! நீ கிறிஸ்தவனாகப் போனாயே?" என்று வருந்தினாள் பாலம்மாள்.

"இல்லை, பாலு! இதோ பார், பூணூல்!" என்று சட்டையைப் பிரித்து மார்பைக் காட்டினார் டாக்டர் பால் ஆரோக்கியம். "இரண்டுலக்ஷ ரூபாய் சொத்தை விட்டுவிட்டு 6000 ரூபாய்க்காக முட்டாளாகப் போனேன் பார்த்தாயா?" என்று சொல்லிவிட்டுச் சிரித்தார்.

"நீ ஊருக்குத் திரும்பி வந்ததே போதும்! சொத்தில் பாதி நீ வைத்துக்கொள். அதுவுங்கூட வேண்டாம். முழுதும் நீயே எடுத்துக்கொள்" என்று பாலம்மாள் சொல்லிவிட்டுக் குழந்தைக்குப் பால் கொடுக்கப் போனாள்.

"அசடுமாதிரி பேசாதே!" என்றார் சிவசுப்பிரமணிய அய்யர். "அவர் உன் பணத்துக்கா ஆசைப்படுவார்? அவர் மகா வைராக்கிய புருஷர் ஆச்சே? சங்கராச்சாரியர் மடத்துக்குப் போய் சத் சங்கத்தில் சேர்ந்து காலக்ஷேபம் செய்வதாகத் தீர்மானித்திருக்கிறார்!" என்றார்.

சிவசுப்பிரமணிய அய்யர் சொன்னது உண்மைதான். டாக்டர் பால் ஆரேக்கியம் தன் அவதாரத்தை முற்றிலும் மாற்றிக் கொண்டு மறுபடி வைத்தியனாத அய்யராகக் கும்பகோணத்துக்குப் போனார். அங்கே வைதிக கோஷ்டியுடன் சேர்ந்து யோக்கியமாக வாழ்க்கை நடத்தி ஆசார சிரேஷ்டராகக் காலம் கழித்தார்.

# எல்லாம் அவனே

சேதுராமய்யர் பழைய காங்கிரஸ்காரர். அவர் 'ஒத்துழையாமை' யில் சேர்ந்து தன் மகன் நாணுவைப் பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்திவிட்டுத் தானும் கோர்ட்டுக்குப் போகாமல் கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தார். சில வருஷங்கள் கழித்து மறுபடி கோர்ட்டுக்குப் போக ஆரம்பித்தார். ஆனல், கட்சிக்காரர்கள் வரமாட்டோமென்ருர்கள்! கஷ்ட ஜீவனம் கஷ்ட ஜீவனமாகவே நடக்கலாயிற்று. நாணு பள்ளிக்கூடம் போகாமல் வீட்டிலேயே ஏதோ கைக்கு எட்டின புத்தகங்கள் படித்துக்கொண்டு தன் கல்வியைத் தானே பார்த்துக்கொண்டு வளர்ந்தான். கொஞ்ச சிரமத்தின் பேரில் அவனுக்கு விவாகமும் முடிந்தது. இது சேதுராமய்யர் மைத்துனன் ஜயராமஅய்யருடைய விடாமுயற்சியால்தான் முடிந்தது.

நாணுவுக்கு நல்ல மாமனர் கிடைத்தார். அவர் அவனை மறுபடியும் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைத்து முன்னுக்குக் கொண்டு வந்து மைசூர் வைத்தியக் கலாசாலையில் சேர்த்தார். நாணுவும் நன்ருகவே படித்துத் தேறி வந்தான்.

நாணுவின் தங்கை லலிதாவைப் போன சித்திரையில் ஜயராமய்யர் தன் மகனுக்கே கலியாணம் செய்து வைத்து முடித்துவிட்டார். பெண்ணுக்கு 16 வயது ஆகிவிட்டது என்று தாயார் ஜானகியம்

மாளுக்கு மிகுந்தகவலையாக இருந்தது. ஜயராமய்யர் மகன் கோபாலகிருஷ்ணன் 'இன்டர்' பரீக்ஷை தேறிவிட்டுச் சென்னைப் பட்டினத்தில் ஒரு பெரிய வெள்ளைக்கார வர்த்தகக் கம்பெனியில் குமாஸ்தாவாக அமர்ந்து வேலை செய்து கொண்டிருந்தான். "இன்னும் கொஞ்ச நாள் செல்லட்டும்; பிறகு நல்ல இடத்தில் பெண் பார்க்கலாம். இந்தக் காலத்தில் பெண் கொடுப்பவர்கள் நிறையச் செய்கிறார்களாமே?" என்று தம் மனைவி சொன்னதை ஜயராமய்யர் கேட்கவில்லை. "கூடவே கூடாது! வரதக்ஷிணையாவது, பைத்தியக்காரத்தனமாவது! பாவம் ஜானகி வேறு யாரைத் தேடிபிடிப்பாள்? அவர்களைக் கடனும், கஷ்டமும் பீடிக்கிறது. ஜாதகப் பொருத்தம் நன்ருக இருக்கிறது. குழந்தை நன்ருக இருக்கிருள்" என்று ஜயராமய்யர் மனைவியின் பேச்சைத் தள்ளிவிட்டு விவாகத்தை முடித்துவிட்டார்.

கோபாலகிருஷ்ணன் தலை தீபாவளிக்கு மாமனர் வீட்டுக்குப் போகப் புறப்பட்டான். அங்கங்கே தண்டவாளம் பெயர்த்தெடுப்பதும் தந்தி யறுத்துவிடுவதும் இன்னும் நடந்துகொண்டிருந்தன. புறப்படும்போது கோபாலகிருஷ்ணனுக்கு மனதில் கொஞ்சம் சந்தேகமாகதானிருந்தது. குறுக்கே ஒரு பூனை ஓடிற்று. ஸ்டேஷனுக்கு அவன் கூடப் போன சினேகிதன் சிரித்தான்.

"நீஎன்ன சகுனத்தை நம்புகிருயா?" என்று கேட்டான் சோமு.

"கிடையவே கிடையாது. தவிர, இது நமக்குத் தெரிந்த பூனை!" என்ருன் கோபாலகிருஷ்ணன்.

"சகுனத்திலே தெரிந்த பூனே தேவலேயோ?" என்று சோமு அதை ஒரு உண்மையான சமாதான மாகவே எண்ணிக் கேட்டான்.

ஸ்டேஷன் சேர்ந்ததும் முட்டையண்டை சோமு நின்ருன். கோபாலகிருஷ்ணன் டிக்கட்டு வாங்கப் போனுன். கூட்டம் அதிகம். ஜப்பான்காரனைப் பற்றிய கிலிமறுபடியும் சென்னையில் பிடித்துக்கொண்டு எல்லாரும் வெளியேற ஆரம்பித்திருந்தார்கள். டிக்கட்டு விற்கும் ஜன்னலிடம் நின்றுகொண்டு "மைசூருக்கு ஒரு டிக்கட்டு" என்ருன் கோபால கிருஷ்ணன்.

டிக்கட்டு குமாஸ்தா கொஞ்ச நேரம் கணக்கைச் சோதித்துப் பார்த்துவிட்டு, "பெங்களூருக்கு இப் போது வாங்கிக் கொள்ளும். அங்கே மைசூருக்கு டிக்கட்டு வாங்கிக்கொள்ளலாம்" என்ருன்.

"சரி, அப்படியே" என்ருன் கோபாலகிருஷ்ணன்.

"நாலு ரூபாய் பன்னிரண்டணு" என்ருன் டிக் கட்டு குமாஸ்தா.

கோபாலகிருஷ்ணன் ஜேபியில் கை போட்டான். பணப் பையை எடுக்க. கை உள்ளே போயிற்று. ஆனல், ஜேபி இல்லே. ஒரே ஓட்டையாக இருந்தது.

"அடே!" என்று திரும்பினுன்.

"என்ன சாமி, பையை தாரைவார்த்து விட்டீங் களா? திருட்டுப் பையன்கள் கத்தரிச்சுவிட்டிருப் பான்கள். கூட்டத்தில் ஜாக்கிரதையாக இருக்க ணுங்கோ" என்ருன் பக்கத்திலிருந்த ஒருவன்.

“கீழே ‘கல்’ என்று சத்தமாச்சு, பாருங்கோ சாமி!” என்ருன் மற்ருெருவன்.

இவர்கள் எந்த ஊருக்கும் போகிறவர்களல்ல. டிக்கட்டு வாங்க வந்தவர்களுக்கு உதவியாகத்தான் கூட்டத்தில் இருந்தார்கள் போலிருந்தது.

“திருட்டுப் பயலேப் பிடி” என்ருன் வேருெருவன். யாரும் யாரையும் பிடிக்கவில்லே. கோபாலகிருஷ்ணன் கீழே கிடந்த தன் கொத்துச் சாவியை எடுத்துக் கொண்டு, பையும் கீழே கிடக்கிறதோ என்று தேடிப்பார்த்தான். அது எப்படிக் கிடைக்கும்? அதற்குள் அது வெகு தூரம் போய்விட்டது. சென்னேத் திருட்டைப் பற்றிச் சொல்லவேண்டுமா?

கோபாலகிருஷ்ணன் டிக்கட்டு வாங்காமல் மூட்டையண்டை நின்ற சோமுவிடம் வந்து, “சோமு உன்னிடம் பணம் இருக்கிறதா?” என்ருன்.

“என்ன சமாசாரம்? பையைத் தாரைவார்த்தாயா?” என்று சோமுவும் சென்னே பாஷையில் கேட்டான். கோபாலகிருஷ்ணன் நடந்த கதையைச் சொன்னுன்.

“பார்த்தாயா? பூனே குறுக்கே ஓடிய பயன். இந்த மார்திரி ஜிப்பா வேண்டாம். நல்ல கோட்டுதைத்துப் போட்டுக் கொள் என்று நான் சொன்னதைக் கேட்டாயா?” என்ருன் சோமு.

சோமுக்குக் கோபாலகிருஷ்ணன் போட்டுக் கொண்டிருந்த கதர் ஜிப்பா எப்போதுமே பிடிக்காது.

"அதெல்லாம் சரி, உன்னிடம் ஏதாவது பணம் இருக்கிறதா?" என்ருன் கோபாலகிருஷ்ணன்.

"என்னிடம் இரண்டு ரூபாய்தானிருக்கிறது. அது போதாதே" என்ருன் சோமு.

இருவரும் வீடு திரும்பினர்கள். அவர்கள் இருளப்ப முதலித் தெருவில் ஒரு மெத்தை வீட்டில் ரூம் எடுத்துக்கொண்டு பக்கத்தில் ஒரு ஓட்டலில் சாப்பிட்டு வந்தார்கள். அறையில் இருவரும் பேசாமல் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தார்கள். ஏதாவது பேசினல் கோபாலகிருஷ்ணனுக்குக் கோபம் வரும் என்று சோமு மவுனமாக இருந்தான். திடீர் என்று சோமு சிரித்தான்.

"உனக்குத்தான் இந்தவிவாகம் பிடிக்கவில்லையே? கோபித்துக் கொண்டு தீபாவளிக்குப் போகாமல் நின்று விட்டதாக எண்ணிக்கொள்ளட்டுமே மாமன் வீட்டார்?" என்ருன் சோமு.

"அதிலென்ன பிரயோஜனம்? பாவம்! லலிதா என்ன செய்வாள்? நான் போகாமலிருந்தால் ரொம்ப வருத்தப்படுவார்கள்" என்ருன் கோபாலகிருஷ்ணன்.

"ஓஹோ! விவாகம் பிடிக்கவில்லை யென்றது வெறும் பேச்சுப்போலிருக்கிறது. அடுத்த நாள் போய்ச் சேர்ந்தால், ஏன் தீபாவளிக்குப் வந்து சேரவில்லை என்று கேட்பார்கள். பையை இழந்த கதையைச் சொன்னல் எல்லாரும் சிரிப்பார்கள். உன் பெண்சாதியும் சிரிப்பாள். என்ருன் சோமு.

கோபாலகிருஷ்ணனுக்கும் இது நியாயமாகத் தான் தோன்றிற்று. முடிவில் ஒன்றும் சொல்லாமல் சும்மா இருந்து விடுவது என்று தீர்மானித்தார்கள்.

மைசூர் மெடிகல் காலேஜில் படிப்பு நிறுத்தம் மும்மரமாக நடந்தது. காலேஜ் மாணவர்களுக்குப் பலமாக போலீஸ் தாக்குதலும், அடியும், காயங்களும் ஒரு நாள் துப்பாக்கிப் பிரயோகமும் நடந்தது.

முதலில் இப்போது நடைபெறும் காங்கிரஸ் காரியங்கள் அஹிம்சைக்கு விரோதம் என்று நாணு மற்றவர்களுடன் வாதாடி வந்தான். பிறகு 'அஹிம்சையெல்லாம் தவறு, பகவத்கீதைதான் சரி' என்று முடிவு கட்டிவிட்டு, "இதுதான் கடைசி யுத்தம்" என்ற மந்திரத்தை பலமாக பிரசாரம் செய்து வந்தான். ஒரு தனித் தீவிர கோஷ்டிக்குத் தலைவனாகிவிட்டான். அந்தக் கோஷ்டியார், "பள்ளிக்கூடம் விட்டுவிடுவது மட்டும் போதாது; ஏதாவது பெரிய காரியங்கள் செய்ய வேண்டும். இது கடைசி யுத்தம்" என்று கூடிக்கூடி யோசித்து வந்தார்கள். வேறு ஊரிலிருந்தும் சிலர் வந்து சேர்ந்தார்கள் 'அவர்கள் அந்த ஊரில் அப்படிச் செய்தார்கள். இந்த ஊரில் இப்படிச் செய்தார்கள்' என்று நடந்ததும் நடக்காததும் எல்லாம் பிரசாரம் செய்தார்கள். கோஷ்டியின் ஊக்கம் அதிகரித்தது. நாணுவும் அவன்கூடச் சில நன்பர்களும் பெங்களூருக்குப் போய் அங்கே சிலருடன் கலந்தார்கள். பெங்களூரண்டை ஒரு கிராமத்தில் இரவில் போய்த் தங்கிப் பக்கத்தில் ரயில் பாதையைச் சேதபடுத்தி விடுவது என்று தீர்மானித்தார்கள்.

அப்படியே திம்முசமுத்திரம் என்ற ஊரண்டை தங்கி இரவில் தண்டவாளத்து ஆணிகளை கழற்றிப் பார்த்தார்கள். பயத்தினாலேயோ, தாங்கள் எடுத்துப்

போன கருவிகள் சரியாக உதவாததினுலேயோ, அன்று காரியம் முடியவில்லை. திரும்பிவிட்டார்கள். இரண்டு நாள் கழித்து மறுபடியும் போனார்கள். ஒரு சிறு பாலத்தண்டை பதுங்கியிருந்து வேலையை முடித்தார்கள். ஆணிகளைக் கழற்றிவிட்டு ஒரு தண்டவாளத்தைப் பெயர்த்து அதைக் குறுக்கே வைத்துவிட்டார்கள். உடனே பைஸிகல் ஏறிப் பெங்களூர் திரும்பி இரவு ஊருக்கு வெளியே ஒரு சிறு கிராமத்தில் படுத்திருந்து காலையில் தனித் தனியாகப் பெங்களூர் வந்து சேர்ந்தார்கள்.

அன்று தீபாவளி, பெங்களூர் ரயில் வண்டி புரண்டு கவிழ்ந்ததாகவும், எஞ்சின் ஓட்டியும் 12 பிரயாணிகளும் மாண்டார்கள் என்றும் 32 பேர் படுகாயமடைந்தார்கள் என்றும் சமாச்சாரம் பெங்களூருக்கு எட்டியது சிலர், "பன்னிரண்டாவது பேராவது! நூற்றைம்பது பேர் செத்தார்கள். சர்க்கார் உண்மையை மறைக்கிறார்கள்" என்று கொஞ்சம் திருப்தியாகவே பேசிக்கொண்டார்கள். நாணுவும் அவன் கோஷ்டியாரும் சுயராஜ்யம் கிட்டிற்று என்று மகிழ்ச்சி அடைந்தார்கள். இவையெல்லாம் 1942 சித்திரபானு வருஷத்திய லீலாவினோதங்கள்.

※ ※ ※

**மை**சூரில் லக்ஷ்மிபுரம் அக்கிரகாரத்தில் சேதுராமய்யரும் ஜானகியம்மாளும் தலை தீபாவளிக்கு மாப்பிள்ளை வருவான் என்று கம்பீரமாகத்தான் ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். மனைவியின் ஆட்சேபணையையும் தட்டிவிட்டு ஜயராமய்யர் கல்யாணத்தை முடித்துவைத்தாரே என்று சேதுராமய்ய

ரும் அவர் மனைவியும் ஆர்ப்பாட்டமாகவே செலவு செய்தார்கள். கடன் வாங்கித்தான் எல்லாம் நடந்தது என்று சொல்லத் தேவையில்லை. லலிதாவும் வெகு ஆசையாகத் தலைதீபாவளியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். புருஷன் வரும்போது தான் எங்கே நிற்க வேண்டும், எவ்வாறு பார்க்கவேண்டும், எந்தப் புடவை உடுத்தலாம், புஷ்பம் எம்மாதிரி தலையில் சூடவேண்டும், நெற்றியில் சாந்துப் பொட்டா, குங்குமப் பொட்டா, எது கோபால கிருஷ்ணனுக்குப் பிடிக்கும் என்றெல்லாம் யோசித்து யோசித்து ஒருதரம் முடிவு செய்ததை மறுபடி மாற்றிச் செய்து வந்தாள். மொத்தத்தில் ரொம்ப மகிழ்ச்சியில் மூழ்கியிருந்தாள். சிறு பெண்ணின் கவலைகளையும் சந்தோஷங்களையும் பேசும் தமிழில் எப்படி எழுதிப் பெரியோருக்கு விளக்க முடியும்?

தீபாவளிக்கு முதல் நாளே மாப்பிள்ளை வந்து சேருவான் என்றிருந்தார்கள். ஆனல், அப்படி வர முடியாது. தீபாவளியன்று காலையில்தான் வந்து சேரமுடியும் என்று கோபாலகிருஷ்ணன் ஒரு 'எக்ஸ்பிரஸ்' தந்தி கொடுத்திருந்தது வந்தது. அதை லலிதா வாங்கித் திருப்பித் திருப்பிப் பார்த்து அனுபவித்தாள்.

"லீவு கிடைத்திருக்காது. அதனல்தான் ஒரு நாள் முன்னதாக வர முடியவில்லை" என்ருர் சேதுராமய்யர்.

மாப்பிள்ளைக்கு லீவு கிடைக்காததே ஜானகியம்மாளுக்கு ஒரு பெருமையாக இருந்தது. தன் மருமகன் உத்தியோகத்திலிருப்பதே அவளுக்கு மகிழ்ச்சி.

உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டும்பொழுது லீவு கிடைப்பது கஷ்டம் என்று சிலர் சொல்ல அவள் கேட்டிருந்தாள்.

அடுத்த நாள் ரயிலடிக்குச் சேதுராமய்யர் போனர். மாப்பிள்ளை வருவதற்குப் பதிலாக வண்டி புரண்டு கவிழ்ந்து பலருக்கு உயிர்ச் சேதம் என்ற சமாசாரம் கேட்டுக்கொண்டு வீடு திரும்பினர்.

* * *

"ஐயோ!" என்று கதறினள் ஜானகியம்மாள். சங்கடத்தையும் கவலையையும் தாங்கமுடியாமல் சேதுராமய்யர் ஒன்றும் பேசாமல் பாய் விரித்துப் படுத்தார்.

"இந்த நாடோடி நாணுவும் எட்டு நாளாக வீட்டுக்கு வருவதையே நிறுத்திவிட்டான்" என்று ஜானகியம்மாள் அழுதாள்.

"யார் இருந்து என்ன செய்ய முடியும்?" என்ருர் சேதுராமய்யர்.

"இது காங்கிரஸ்காரர்கள் வேலையா? இந்தப் பாழாய்ப்போன சுயராஜ்யம் யாருக்கு வேண்டும்?" என்ருள் ஜானகியம்மாள்.

"காங்கிரஸ்காரர்கள் இதெல்லாமா செய்வார்கள். போக்கிரிப் பயல்கள் யாரோ செய்திருக்கிருர்கள்" என்ருர் சேதுராமய்யர்.

"என் வயிற்றில் நெருப்பு வைத்து விட்டார்களே யாராயினும் சரி" என்ருள் ஜானகியம்மாள்.

லலிதாவுக்கு உலகம் தலைகீழாகத் திரும்புவது போல் தோன்றிற்று. வீட்டில் கூடத்தில் ஸ்ரீராம

பட்டாபிஷேகப் படம் ஒன்று இருந்தது. அதற்கு முன் ஒரு விளக்கு ஏற்றிவைத்தாள். "கடவுளே! எப்படியாவது காப்பாற்ற வேண்டும்!" என்று மன திற்குள் வேண்டிக் கொண்டாள். தாயாரிடம் போய், "இல்லையம்மா! ஒன்றும் கெட்ட சமாசாரம் வராது. நீ பயப்படவேண்டாம்" என்று சமா தானம் சொல்லிப் பார்த்தாள். பிறகு இருவரும் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு 'கோ'வென்று அழுதார்கள்.

* * *

அடுத்த நாள் ஒரு செய்தியும் வரவில்லை. பத் திரிகைகளில் பெயர்கள் வந்திருந்தாலும், இறந்தவர் களில் சிலருடைய விவரம் தெரியவில்லை யென்றும், எல்லாப் பிரேதங்களும் பெங்களூருக்கு எடுத்துப் போய் ஆஸ்பத்திரியில் விசாரணைக்காக வைத்திருப்ப தாகவும் தெரிந்தது. வண்டியிலிருந்து தப்பிப் பிழைத்தவர்கள் சிலர் மைசூருக்கு வந்து சேர்ந்தார் கள். ஆனால், கோபாலகிருஷ்ணன் வரவில்லை. கடித மும் வரவில்லை.

"உடனே பெங்களூருக்குப் போங்கள். ஆஸ்பத் திரியில் தேகத்தையாவது கண்ணால் பார்த்துவிட்டு வாருங்கள்" என்றாள் மனைவி.

"தேகம்" என்றதும் "ஓ" என்று லலிதா தலையை இடித்துக்கொண்டு அழுதாள்.

* * *

"ஹேய்ஹேய்!" என்று குதிரை வண்டி ஓட்டும் சத்தம்கேட்டு வாசலில் நின்ற மாதிரி இருந்தது. ஒரே

ஓட்டமாக லலிதா ஓடினுள். திரும்ப மாப்பிள்ளேயும் மகளுமாக வந்தார்கள்! இருண்டுபோன உலகம் பளிச் சென்று பிரகாசித்தது.

ஜானகி மருமகனைக் கட்டியணேத்துக் கொண்டு அழுதாள்.

"என்னப்பனே, பிழைத்தாயா!" என்ருள்.

"அம்மாதிரி ஒன்றும் நமக்கு நேராது. ஜாதகத் தில் ஒன்றும் தோஷம் இருக்கவில்லேயே என்று எனக்குத் தைரியமாகத்தானிருந்தது" என்ருர் சேது ராமய்யர்.

வண்டியிலிருந்து பெட்டியும் படுக்கையும் வண்டிக்காரன் எடுத்து வந்தான். அவனுக்குத் தர வேண்டிய வாடகையை லலிதாவே விசாரித்துக் கொடுத்தனுப்பினுள். புடவை, பூ, சாந்துப்பொட்டு, எல்லா சந்தேகங்களேயும் அவள் இப்போது மறந்து விட்டு, மாப்பிள்ளே எதிரிலேயே கூச்சமில்லாமல் வரு வதும் போவதும் பேசுவதுமாக இருந்தாள்.

பிறகு கோபாலகிருஷ்ணன் தன் கதையை விவரித்துச் சொன்னுன்.

"திருடன் பூரண ஆயுசுடன் இருக்கவேண்டும், பையை அவன் திருடாதிருந்தால் நீ அன்று ரயிலில் ஏறி விபத்தில் சிக்கித்தானிருப்பாய். ஜாதகம் எப் படியிருந்தால் என்ன? அந்தத் திருடன்தான் என் குழந்தையின் கழுத்து நூலேக் காப்பாற்றினுன்" என்ருள் ஜானகியம்மாள்.

"அந்தப் பூனேக்குக்கூட அம்மா ஒரு மாலே போடுவாள் போலிருக்கிறது!" என்ருள் லலிதா.

தன்னையும் அறியாமல் அப்பொழுது அவள் கை 'கழுத்து நூலை'த் தடவிக்கொண்டிருந்தது.

"பாவம், அந்தப் பூனை என்ன செய்யும்? தடுத்துப் பார்த்தது. இந்தக் காலத்தில் சாஸ்திரத்தை யார் நம்புகிறார்கள்? பூனை குறுக்கே போனதைப் பார்த்தும் யாராவது பிரயாணம் போகலாமோ? ரயிலுக்குப் போவதை நிறுத்திவிட்டிருந்தால், பையும் திருட்டுப் போகாமலிருந்திருக்கும், விபத்தும் தாண்டியிருக்குமே? பூனையும் அவனே, திருடனும் அவனே, எல்லாம் வெண்ணெய் திருடும் கண்ணனே" என்றாள் ஜானகியம்மாள்.

"ரொம்ப சரி, அடுத்த தீபாவளிக்குப் பூனை குறுக்கே வந்தால் நான் வராமல் நின்று விடுகிறேன்" என்று கோபாலகிருஷ்ணன் லலிதாவைப் பார்த்தவாக்காக மாமியாருக்குச் சொன்னான்.

"இப்படியெல்லாம் அபசகுனமாகப் பேச வேண்டாம். காப்பி சாப்பிட்டுவிட்டு உடுப்பெல்லாம் கழற்றி எண்ணெய் தேய்த்துக்கொள்" என்றாள் ஜானகியம்மாள். லலிதா உள்ளே சமையலறைக்கு ஓடினாள், காப்பி கொண்டுவர.

# பாதுகா பட்டாபிஷேகம்

இராமாயண காவியத்தில் பாதுகை மிக்க மகிமை பெற்றிருக்கிறது. பரதன் எவ்வளவோ வருந்தி நேரில் கேட்டுக்கொண்டும் இராமர் பதினலு வருஷம் வனவாசம் முடிவதற்கு முன்னல் அயோத்திக்கு வர முடியாது என்று மறுத்து விடுகிருர். கடைசியாக, பரதன், "தங்கள் காலில் அணிந்துள்ள பாதுகைகளையாவது கொடுங்கள்'' என்று மன்ருடுகிருன். இராமர் கொடுக்கிருர். பரதன் அப்பாதுகைகளைத் தலையிலே வைத்துத் தூக்கிக்கொண்டு போய் அயோத்தியில் சிங்காதனத்திலேயே ஏற்றி வைத்து விடுகிருன். இராமருடைய பாதுகைகளே இராஜ்யத்தை ஆள்வதாகப் பாவித்து, தான் பிரதிநிதியாக மட்டும் அரசு புரிகிருன். இந்தச் சம்பவத்துக்குப் 'பாதுகா பட்டாபிஷேகம்' என்று பெயர் ஏற்பட்டு விட்டது. நாடகங்களும் காலட்சேபங்களும் எத்தனையோ நடைபெற்று வருகின்றன.

இப்படியெல்லாம் படித்திருந்தும் கேட்டிருந்தும் பாதுகைகளின் மகிமையை நம்மில் பலர் உணர்வதில்லை. "செருப்புத்தானே!" என்று இகழ்ச்சியாகப் பேசுகிரேம். அதை ஒரு மட்டமான பொருளாகவே கருதுகிரேம். நன்ருகத் துடைத்து வைத்துக்கொள்ளுவதுகூட இல்லை.

என்னுடைய வாழ்க்கையில், பாதரட்சைகளின் மகிமையை வேறொரு விதத்தில் நன்கு அறிந்து கொள்ளும்படியான சந்தர்ப்பம் ஒன்று எனக்குக் கிடைத்தது. வியக்கத்தக்க அந்த அற்புத நிகழ்ச்சியை இங்கே எழுதுகிறேன்.

1929-ஆம் வருஷம். திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் நானும் என் சகாக்களும் வேலை செய்து கொண்டிருந்தோம். திருச்செங்கோடு பிராந்தியத்தில் அடிக்கடி பஞ்சம் ஏற்படுவது வழக்கம். வானம் பார்த்த பூமி, மழை பெய்தால்தான் குட்டைகளில் ஜலம். நிலங்களில் வெள்ளாமை. மழை பெய்யும் வருடங்களைக் காட்டிலும் மழை பெய்யாத வருடங்களே அதிகம்.

பஞ்சத்தில் அடிபட்டவர்களுக்குக் காந்தி ஆசிரமத்திலிருந்து சொற்ப விலைக்குத் தானியம் வழங்கப்பட்டு வந்தது. பஞ்சத்தின் கொடுமை அதிகமாயிருந்த கிராமங்களில் மணியனூர்க் கிராமம் ஒன்று. அந்த ஊரில் எல்லா வீடுகளும் சக்கிலியர் வீடுகள். விவசாயிகள் அரைப் பட்டினியாயிருக்கும் போது செருப்புத் தைக்கும் வேலை எங்கே கிடைக்கப் போகிறது? ஆகையால் மணியனூர் ஹரிஜனங்களும் அரைப் பட்டினியாகவே வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தார்கள்.

வாரத்தில் ஒரு நாள் மணியனூரில் சந்தை கூடும். அக்கம் பக்கத்திலுள்ள பல ஊர்களிலிருந்து ஜனங்கள் சாமான் விற்கவும் வாங்கவும் வருவார்கள். இப்படிச் சந்தை நடக்கும் இடங்களைப் பார்த்துத் தான் பழைய நாளில் கவர்ன்மெண்டார் கள்ளு—

சாராயக் கடை வைப்பது வழக்கம். எத்தனையோ பாடுபட்டுக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து ஊற்றிப் பயிர் செய்து விளைந்த பொருள்களைச் சந்தையில் கொண்டு போய் விற்று விட்டுக் கிராம வாசிகள் திரும்பிப் போகும்போது, அவர்கள் கொண்டு போகும் பணத்தில் ஒரு பெரும் பகுதியைக் கள்ளு-சாராயக் கடைகள் மூலமாக அரசாங்கத்தார் எடுத்துக் கொள்வது பழைய கால வழக்கம்.

ஹரிஜனங்களில் பெரும்பாலோர் குடிப் பழக்கமுள்ளவர்கள்.

மணியனூர்ச் சக்கிலியர்களும் அப்படித்தான். காந்தி ஆசிரமத்தார் பஞ்ச நிவாரண வேலை நடத்திய கிராமங்களில் "குடிப்பதில்லை" என்று ஜனங்கள் சபதம் செய்து கொடுத்தார்கள். அவ்வாறே மணியனூர்க் கிராமத்து ஹரிஜனங்களும் மது விலக்குப் பிரதிக்ஞை செய்திருந்தார்கள்.

ஒரு வியாழக்கிழமையன்று, மணியனூர்க் கிராமத்து முனியன் இன்னும் சிலரையும் அழைத்துக் கொண்டு, காந்தி ஆசிரமத்தில் நான் இருந்த குடிசைக்கு வந்தான். அன்றைக்குத்தான் ஆசிரமத்தில் தானியம் வழங்கும் நாள்.

"இங்கே ஏன் வந்தீர்கள்? தானியம் கொடுக்கும் கொட்டகைக்குப் போங்கள்!" என்றேன்.

"ஒரு காரியம் நடந்துடுத்துங்கோ!" என்று சொன்னான் முனியன்.

"என்ன நடந்து விட்டது?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லேங்கோ! கட்டுப்பாட்டை மீறி நன்ருகக் குடித்துவிட்டானுங்கோ! நீங்கள் விசாரித்து முடிவு செய்யணுங்கோ!" என்ருன்.

கடிதங்களுக்குப் பதில் எழுதிக்கொண்டிருந்தேன். எழுத வேண்டிய கடிதங்கள் இன்னும் நிறையப் பாக்கி இருந்தன. கடுமையாகப் பேசினேன்.

"கள்ளுக் குடிக்கப் பணம் இருந்தால் தானியம் வாங்கவும் பணம் இருக்கும். உங்களுக்கு எதற்குப் பாதி விலேக்குத் தானியம் தருவது? முடியாது! போங்கள்! வேண்டும் என்கிற மட்டும் குடித்துவிட்டு போங்கள்!" என்றேன்.

அவர்கள் குடிக்காமல் இருந்து வந்தால் அவர்களுக்குத்தான் லாபமே தவிர மற்றவர்களுக்கு ஒன்றும் நன்மை இல்லே என்பதை அவர்கள் மனத்தில் நன்ருய்ப் பதியச் செய்ய விரும்பினேன்.

முனியனும், அவர்களோடு வந்தவர்களும் போகவில்லே. "அப்படிச் சொன்னல் என்ன செய்வதுங்கோ! நியாயத்தை விசாரித்துக் குற்றவாளியைத் தண்டியுங்கோ!" என்ருன் முனியன்.

"குடித்தவர்கள் யார்? எத்தனே பேர்?" என்று கேட்டேன்.

"இரண்டு பேருங்கோ!" என்ருன் முனியன்.

"அவர்களே இங்கே அழைத்து வந்திருக்கிருயா?"

"ஒருத்தன் வந்திருக்கிருன்; இன்னெருத்தன் வீட்டுக்காரி வந்திருக்கிருள்" என்ருன் முனியன்.

"குடித்ததாக அவர்களா ஒப்புக் கொண்டார் களா?" என்று கேட்டேன்.

"இல்லேங்க! நேற்று ராத்திரி குடித்துவிட்டு வந்து பெண்சாதியோடு சண்டை போட்டானுங்க. ஊருக்கெல்லாம் தெரியும். ஒப்புக் கொள்ளாமல் போனால் எப்படி?" என்றான் முனியன்.

குற்றவாளியைப் பார்த்து, "நீ என்னப்பா சொல்லுகிறாய்?" என்று கேட்டேன்.

"பெண்சாதியோடு சண்டை போட்டது நெசந் தானுங்க. அதனாலே குடித்தேன் என்று சொல்லி விடலாமா? குடிக்காதவன்கள் எல்லாம் பெண்சாதி யோடு சண்டை போடுகிறதே இல்லங்களா?" என்று சாமார்த்தியமாகப் பேசினான்.

நான் கோபமாக, "இதோ பார்! உண்மையைச் சொல். நீ நேற்றைக்கு கள்ளுக் கடைக்குப் போய்க் குடித்தாயா? இல்லையா? உங்கள் ஊரில் ஒருவன் கள்ளுக் கடைக்குப் பணம் கொடுத்தாலும் ஊருக்கே தானியம் கொடுப்பதை நிறுத்தி விடுவோம் என்று சொல்லி யிருக்கிறேன் அல்லவா? அதை உங்கள் ஊராரும் ஒப்புக்கொண்டார்கள்" என்றேன்.

"இல்லேங்க, ஐயா! நான் குடிக்கவில்லை. பொய் சொல்லுகிறானுங்க" என்றான்.

மற்றவர்களைப் பார்த்து, "நீங்கள் எல்லாரும் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"பெண்சாதியோடு இவன் சண்டைப் போட்டது நெசம்; குடித்ததை நாங்கள் கண்ணுல் பார்க்க லேங்கோ!" என்று சொன்னுர்கள்.

நான் குற்றவாளியைப் பார்த்து, "உன்பேரில் முனியனுக்கு ஏதாவது பகையா? நிஜம் இல்லாவிட் டால் எதற்காக உன்மீது குற்றம் சொல்லுகிருன்?" என்று கேட்டேன்.

"ஆமாம், அவனுக்கும் எனக்கும் பகைதா னுங்க. அதை நான் சொன்னதற்காக அவனுக்கு என்மேலே கோபமுங்கோ!" என்ருன்.

"முனியா! இவன் சொல்கிறது நிஜமா?" என்று முனியனைப் பார்த்துக் கேட்டேன்.

"இதோ இந்தக் கிழவனைக் கேட்டுப் பாருங்கோ இவன் மகன் குடித்தானு, இல்லையா என்று. கிழவன் எனக்குச் சித்தப்பன். இரண்டு பேருக்கும் பொதுவில் கிழவன் எது நெஜம் எது பொய் என்று சொல்லட் டும்" என்ருன் முனியன்.

கிழவனைப் பார்த்து, "உன் மகன் குடித்தது உண்டா? இல்லையா?" என்று கேட்டேன். கிழவன் ஒரு கணம் மௌனமாக" இருந்தான், பிறகு,

"நேற்று இரவு சத்தம் போட்டுக் கலவரம் விளை வித்தது நெசம்தானுங்க" என்ருன்.

"சத்தம் போட்டதைப்பற்றி நான் கேட்கவில்லை. குடித்தது உண்டா? இல்லையா?" என்று மீண்டும் கேட்டேன்.

"இல்லேங்க, குடிக்கலேங்க, சண்டை போட்டது என்னவோ நெசந்தானுங்க" என்றான் கிழவன்.

முனியன் ஆத்திரமாக, "கிழவனும் பொய் சொல்லுகிறான். சத்தியம் பண்ணிச் சொல்லச் சொல்லுங்கோ" என்றான்.

※ ※ ※

பிரமாணம் எந்த முறையில் வாங்குவது என்று யோசனை செய்தேன். கோயிலுக்குப் போவதினால் கிழவன் மாற்றிச் சொல்லுவான் என்ற நம்பிக்கை கொஞ்சமும் இல்லை. மகனைத் தப்ப வைப்பதற்காகக் கிழவன் சொல்லுவதைச் சொல்லியாகிவிட்டது. சாமி கோயிலில் நிற்பதால் மட்டும் வேறு விதமாய்ச் சொல்லப் போகிறானா? பதினெட்டு வருஷம் வக்கீல் தொழில் பார்த்த அனுபவத்தில் எனக்குப் பிரமாணங்களிலும் சத்தியங்களிலும் நம்பிக்கையே தீர்ந்து போய்விட்டது. பொய் சாட்சியம் சொல்வதென்று தீர்மானித்துக்கொண்டு வருகிறவர்கள், எப்படியும் பொய் சொல்லியே தீருவார்கள். பின்னால் குறுக்கு விசாரணையில் அவர்களுடைய சாட்சியம் பொய் என்று வெளிப்படுத்தினால்தான் உண்டு. உலகமே இப்படி இருக்கும்போது இந்தக் கிழவனைச் சத்தியம் பண்ணச் சொல்லிக் கேட்பதில் மட்டும் என்ன பயன் விளையப் போகிறது? இந்த மாதிரி ஜனங்கள் பொய் சொல்ல அஞ்சக்கூடிய பிரமாண முறை என்ன இருக்கிறது? முனியனைத் திருப்தி செய்வதற்காக ஏதாவது ஒன்று கேட்டுவிட்டு இவர்கள் எல்லாரையும் திருப்பி அனுப்பிவிட வேண்டியதுதான்.

இப்படி நான் எண்ணிக் கொண்டிருக்கையில் பக்கத்தில் கிடந்த என் செருப்பு ஜதையின்பேரில் என் பார்வை தற்செயலாக விழுந்தது. உடனே கிழவனைக் கிட்டத்தில் வரும்படி அழைத்தேன்.

"இதோ பாரப்பா; தோல் வேலையினால்தானே உனக்குப் பிழைப்பு!" என்றேன்.

"ஆமாமுங்கோ" என்றான் கிழவன்.

"சரி, உனக்கு ஜீவனம் அளிக்கும் தோல் இதோ இருக்கிறது, இதைக் கையில் எடுத்துக்கொள்" என்று அந்தச் செருப்பு ஜதையைச் சுட்டிக் காட்டினேன்.

கிழவன் எடுத்துக்கொண்டான்.

"இப்போது நான் சொல்லுகிறபடி திருப்பிச் சொல். 'கடவுளின் முன்னிலையில் எனக்குச் சோறு போடும் இந்தத் தோலின்மேல் ஆணையாக நான் சொல்லுவது சத்தியம்'."

கிழவன் அதேமாதிரி அந்த வார்த்தைகளைத் திருப்பிச் சொன்னான்.

"நேற்று இரவு உன் மகன் குடித்துவிட்டு வந்திருந்தானா?" என்று கேட்டேன்.

"ஆமாமுங்கோ! குடித்துவிட்டு வந்திருந்தானுங்கோ!" என்றான் கிழவன்!

கிழவனுடைய பதில் என்னை ஸ்தம்பிக்கச் செய்துவிட்டது. இந்த உலகத்திலும் சில சமயம் அற்புதங்கள் நிகழத்தான் செய்கின்றன. ஆனால் கிழவனை உண்மையை ஒப்புக்கொள்ளும்படி செய்த

இந்த அற்புதம் என்னைச் சிறிது பேச முடியாமல் செய்துவிட்டது. பிறகு குற்றவாளியைப் பார்த்து, "இங்கே வா, செருப்பை நீயும் கையில் எடுத்துக் கொள்" என்றேன்.

எடுத்துக் கொண்டான்.

"தோலின்மேல் ஆணையாகச் சொல். நீ குடித்த துண்டா, இல்லையா?" என்று கேட்டேன்.

"குடித்தேனுங்க, குற்றந்தானுங்க" என்று மக னும் ஒப்புக் கொண்டான்.

எல்லாருமாகச் சேர்ந்து குற்றம் செய்தவனுக்கு நான்கு அணு அபராதம் விதித்தார்கள். குற்றவாளி அந்த நான்கு அணுவையும் உடனே கொடுத்துவிட் டான். அது பஞ்ச நிவாரண நிதியில் சேர்க்கப் பட்டது.

பிறகு முனியனையும் அவனோடு வந்தவர்கள் அத் தனை பேர்களையும் ஒவ்வொருவராகக் கையில் செருப்பு ஜதையை எடுத்துக்கொண்டு, "இனிமேல் கள்ளைத் தொடுவதில்லை" என்று பிரமாணம் பண் ணச் செய்தேன். அவர்கள் அப்படியே பிரமாணம் செய்துவிட்டுச் சோளம் வாங்கிக்கொண்டு ஊருக்குத் திரும்பினார்கள்.

அவர்கள் நின்ற இடத்தில் பழைய நைந்து போன என் செருப்பு ஜதை கிடந்தது. அதன்பேரில் எனக்கு என்றும் ஏற்படாத மரியாதை ஏற்பட்டது. செருப்பு என்பது அலட்சியம் செய்யக்கூடிய பொருள் அல்ல. காலில் போட்டுக்கொண்டு நடப்பதற்கு

மட்டும் உபயோகமான பொருள் அல்ல. எத்தனையோ ஏழை ஜனங்களுக்கு ஜீவாதாரமாக இருந்து வருகிறது. இந்த ஏழைகளுக்குக் கடவுளும், பக்தியும் சமயமும் அதுதான்.

இனி செருப்பைக் காலில் மாட்டிக் கொள்ளும் போது பயபக்தியுடன் அதனிலுள்ள மெய்ப்பொருளை வணங்கிவிட்டு அதைக் காலில் போட்டுக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டேன்.

# கொழுக்கட்டை

"இந்தாங்கோ துஷ்டப் பயல்களே!" என்ருர் மாமா, கடைத் தெருவுக்குப் போய்த் திரும்பியவர்.

ராமுவும் வெங்குவும் ஓடி வந்தார்கள். பின்னுல் இவர்களுடைய தங்கை சாரதாவும் வந்தாள்.

"உனக்கு எந்தப் பொம்மை வேண்டும்? இதோ கண்ணன்! இதோ பிள்ளையார்! இதோ அனுமான்! எது வேண்டும் உங்களுக்கு?"

"ஒவ்வொருத்தராகச் சொல்லுங்கள்" என்ருர் மாமா.

"எனக்குப் பட்டாசுக்கட்டு வேண்டும்" என்ருள் சாரதா.

"பட்டாசுக் கட்டு இல்லையே!" என்ருர் மாமா.

"எனக்குப் பிள்ளையார் வேண்டாம், எனக்கு அனுமானைக் கொடு" என்று வெங்கு சொல்லிக் கொண்டே அனுமானைப் பிடுங்கிக்கொண்டு ஓடினுன்.

"இந்தா, நீ பிள்ளையாரை வைத்துக் கொள். எவ்வளவு அழகாக இருக்கிருர், பார்!" என்று மாமா ராமுவுக்குப் பிள்ளையாரைத் தந்தார்.

இதோ பட்டாசுக் கட்டு!" என்று சாரதா பின் பக்கமாக மாமா மடியில் செருகியிருந்த பட்டாசுக் கட்டை இழுத்து எடுத்துக்கொண்டு ஓடினுள்.

"எனக்கும் பட்டாசு!" எனக்கும் பட்டாசு!" என்று வெங்குவும் ராமுவும் கத்திக் கொண்டு மாமாவைச் சுற்றிக் கொண்டார்கள்.

"சாரதாவுக்குச் சுடத் தெரியாது; பயப்படுவாள். நீங்கள்தான் வாங்கிச் சுடவேண்டும். பொம்மைகளை அவளுக்குக் கொடுங்கள்" என்றார் மாமா.

முடியாது! அனுமான் எனக்கே வேண்டும்' என்றான் வெங்கு.

எனக்குப் பிள்ளையார் இருக்கட்டும். பார், எவ்வளவு அழகாக இருக்கிறார்!" என்றான் ராமு விநாயகரை மேலே தூக்கி.

"தொந்தி, மாமாவைப் போலவே இருக்கிறது!" என்றான் வெங்கு.

"அப்படிச் சொல்லாதே!" என்று மாமா வெங்குவின் காதைத் திருகினார்.

ஐயோ!" என்று வெங்கு வேஷம் போட்டு அழுதான். பிறகு, "என் அனுமாரைப் பார். ராக்ஷசர்களை அடித்துத் தள்ளுவார்" என்று சொல்லிக் கொண்டு பொம்மையைத் தோள் மேல் வைத்துக் கொண்டு துள்ளிக் குதித்தான்.

"அண்ணா! எனக்குக் கொடு அனுமாரை' என்றாள் சாரதா.

"மாட்டேன்! எனக்கு பட்டாசுக் கட்டைக் கொடு. கொடுத்தால் அனுமாரை உனக்குத் தருவேன்" என்றான் வெங்கு.

கண்ணன் பிரதிமையை எடுத்துக் காட்டி, "இது யாருக்கு வேண்டும்?" என்றார் மாமா.

"எனக்கு, எனக்கு" என்று சமையலறையில் தாயாரிடம் போயிருந்த சாரதா ஓடிவந்தாள்.

"பட்டாசுக் கட்டு எங்கே?" என்றார் மாமா.

"அம்மாவிடம் வைத்திருக்கச் சொல்லிக் கொடுத்திருக்கிறேன்" என்றாள் சாரதா.

"சரி, இந்தா" என்று கண்ணனைச் சாரதாவிடம் தந்தார்.

அதற்குள் ராமு தன்னுடைய பிள்ளையாரை ஒரு பெட்டி மேல் வைத்து முறையாகக் கும்பிட்டுக் கொண்டிருந்தான்.

வெங்கு அனுமாரைத் தோள்மேல் ஏற்றிக் கொண்டு யுத்த நர்த்தனம் செய்தான். சாரதா கண்ணனை எடுத்துக்கொண்டு அம்மாவிடம் போய், "அம்மா! கண்ணனை பூஜையில் வை எல்லோரும் கும்பிடலாம்" என்றாள்.

பிறகு ராமுவும் வந்து, "இதையும் பூஜையறையில் வையம்மா!" என்று பிள்ளையாரைக் கொடுத்தான்.

"இதையும் வை அம்மா!" என்று வெங்கும் தன் அனுமானைத் தந்தான். எல்லாப் பிரதிமைகளையும் வெகு அழகாகப் பூஜையறையில் சீதம்மாள் வைத்துப் புஷ்பம் சாத்தினாள்.

"பிள்ளையாருக்கு ஏன் அம்மா இப்படித் தொந்தி?" என்று கேட்டாள் சாரதா.

"எல்லோருடைய கஷ்டங்களையும் பிள்ளையார் வாங்கிக்கொள்ளுகிருர். வாங்கிக் கொழுக்கட்டை யாகப் பண்ணிப் பண்ணிச் சாப்பிட்டுத் தீர்த்து விடு கிருர். அதனுல் வயிறு பெரிசாகப் போய்விட்டது, பாவம்!" என்ருள் சீதம்மாள்.

"மாமாவுக்கு ஏன் அம்மா, இவ்வளவு பெரிய தொந்தி?" என்று வெங்கு மெதுவாகத் தாயா ரண்டை போய்க் கேட்டான்.

"அவர் பையனுக இருந்தபோது ரொம்ப கொழுக்கட்டை சாப்பிட்டு இப்படியாச்சு" என்ருள்.

"அம்மா, எனக்குக் கொழுக்கட்டை வேண் டாம்" என்ருன் ராமு.

"எனக்கு வேணும். நான் சாப்பிடுவேன். வயிற் றைக் கெட்டியாகப் பிடித்து அமுக்கி, தொந்தியா காமல் துணியை இறுக்கிக் கட்டிவிடுவேன்" என்ருன் வெங்கு.

அப்போது மாமா வந்தார். எல்லோரும் 'கொல்!' என்று சிரித்தார்கள்.

"வெங்கு பொல்லாத பையன். அவனைப் பள்ளிக் கூடத்தில் போட்டு நன்ருய் அடிக்கச் சொல்ல வேண் டும்" என்ருர் மாமா.

"பள்ளிக்கூடத்தில் இப்போதெல்லாம் அடிப் பதே கிடையாது. எல்லாம் கெட்டுப்போச்சு" என் ருள் சீதம்மாள்.

"மாமா! மாமா! நீங்கள் பள்ளிக்கூடத்தில் அடி வாங்கினீர்களா?" என்று கேட்டான் வெங்கு.

"போக்கிரிப் பயலே! இப்படி வாருங்கள் எல்லாரும்" என்று குழந்தைகளை வரிசையாக நிற்க வைத்து, "சொல்லுங்கள்: கணேசாய நமஹ" என்றார். எல்லாரும் சொல்லிக் கும்பிட்டார்கள். "ஹனுமதே நமஹ" என்று சொல்லி அனுமாரைக் கும்பிட்டார்கள்.

"விஷ்ணவே நமஹ!"

மூன்று குழந்தைகளும் அப்படியே சொல்லிக் கண்ணனைக் கும்பிட்டார்கள்.

"இப்போது சாப்பிடுங்கள்" என்று ஒரு பெரிய பொட்டலத்தை அவிழ்த்து, குழந்தைகளுக்கு மிட்டாய் பிரித்துக் கொடுத்தார்.

"அனுமார் என்ன பண்ணினார், சொல்லு."

"சீதையைக் கண்டு பிடித்தார்" என்றாள் சாரதா.

"கிருஷ்ண பகவான் என்ன செய்தார்?"

"தேர் ஓட்டினார்" என்றான் ராமு.

"பிள்ளையார் என்ன செய்கிறார்?"

"எல்லோருடைய கஷ்டங்களையும் வாங்கிச் சாப்பிட்டு விடுகிறார்!" என்றான் வெங்கு.

# பூனை குறுக்கிட்டது

பெரிய திருமாளிகை வேங்கடதாதாச்சாரி பன்னிரண்டு வருஷம் வியாகரணமும் தர்க்க சாஸ்திரமும் படித்த பண்டிதர். அவருக்கு எட்டுப் பெண்களும் ஒரு மகனும் உண்டு. பெண்களுக்கு எப்படியோ கஷ்டப்பட்டு விவாகங்கள் செய்து முடித்தார்.

கடைசியாகப் பிறந்த மகனுக்கு வேதாந்த தேசிகன் என்ற உயர்ந்த பெயர் இட்டார். ஆனல், எவ்வளவு பிரயத்தனப்பட்டாலும் அவனுக்குப் படிப்பே வரவில்லை. சிறு பையனக இருக்கும்பொழுதிலிருந்தே ஊரில் துஷ்டர்கள், நீச்சர்கள் சகவாசமே அவனுக்கு ருசி. அவர்களுடன் சேர்ந்து வரவர சுத்தமாகக் கெட்டுப் போனன். பகலில் அக்கிரகாரத்தில் மற்ற பிராமணர்களோடு பிராமணனகத்தான் இருப்பான். ஆனல் இரவில் தன் கோஷ்டியுடன் கன்னக் களவு நடத்துவான்.

இது ஊரெல்லாம் தெரிந்த விஷயம். வீட்டுக்குக் கன்னம் வைத்தால் முதலில் தைரியமாய் நுழைவது வேதாந்த தேசிகன்தான் என்பார்கள். இவன் உள்ளே புகுந்து கதவுத் தாள் திறந்து கொடுத்த பின்புதான் மற்ற கூட்டாளிகள் தங்கள் தங்களுக்கு இட்ட வேலையில் கலந்து கொண்டு காரியத்தை முடிப்பார்களாம். 'என்னவானலும் பார்ப்பானுக்கு

நாம் சமானமாவோமா?' என்று குறவர்கள் எல்லோரும் இவனைப் புகழ்வது வழக்கமாம். 'ஜன்மாந்தர கர்மம்' என்று வருத்தப்பட்டுக்கொண்டு அவன் தகப்பனும் இறந்துவிட்டார்.

எட்டு வருஷம் இந்த வியாபாரம் நடத்தினன். எங்கேயும் சிக்கிக் கொள்ளாமல், ஒன்பதாவது வருஷம் ஒரு நாள் வேதாந்த தேசிகன் குளத்தில் மாலை சந்தியா வந்தனம் செய்துவிட்டுப் படி ஏறினன்.

"சாமி ஒரு பேச்சு!" என்று சொல்லி, குள்ளமான கருத்த ஒரு ஆள் வேதாந்த தேசிகனிடம் வந்தான்.

"என்ன சொல்லுகிருய்? யார் நீ?" என்று கம்பீரக் குரலில் கேட்டான்.

"நான் தெரியாதா? மேல் சீமை புத்தூர் குறவனுங்கோ. இதை எப்படியாவது விற்றுக் கொடுக்கணுங்கோ. இது நல்ல தங்கம் என்கிருர்கள்" என்று சொல்லித் தன் தலைத்துண்டை எடுத்து, முடிச்சை அவிழ்த்துப் பளபளவென்று ஒரு தங்கக் காசு மாலையைக் காட்டினன்.

சுற்றிப் பார்த்து யாருமில்லை என்று நிச்சயம் செய்துகொண்டு, "இது உனக்கு எங்கே கிடைத்தது? நான் நகை வியாபாரி என்று நினைத்தாயா?" என்ருன் வேதாந்தன்.

"இல்லை சாமி, எங்கள் உறவு முறையார் உங்களிடம் போகச் சொன்னர்கள். இதை உங்களிடம் தந்தால் பார்த்துக் கொள்வீர்கள் என்ருர்கள். பணமாகச் செய்து, பாதி நீங்கள் வைத்துக்கொண்டு

யாதி அடிமையிடம் குடுத்து விடுங்கோ!" என்றான் குறவன்.

"குறப்பயலே. நான் யார் என்று நினைத்தாய்? உன்னைப் போலீஸில் ஒப்படைத்து விடுவேன் தெரியுமா?" என்று சொல்லி மறுபடியும் சுற்றிப் பார்த்தான்.

"சாமி, என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? எங்கள் இனத்தாருக்கு நீங்கள் தெரியாதவரா! நகையை எடுத்து பார்த்துச் சொல்லுங்கள்" என்றான்.

நகையைக் கையில் வாங்கிக்கொண்டு, "இது உனக்கு எங்கே கிடைத்தது சொல்!" என்றான் தேசிகன்.

பக்கத்து மாமரத்தில் சலசலவென்று சப்தம் கேட்டு தேசிகன் திடுக்கிட்டுப் பார்த்தான்; ஒரு குரங்கு கீழே குதித்தது.

"யாரும் இல்லேங்கோ. அதெல்லாம் நான் பார்த்துக் கொண்டுதான் வந்தேன். நான் குறவனில்லையா?" என்றான்.

"சரி, போ! வெள்ளிக்கிழமை வரட்டூர் சுடுகாட்டு மண்டபத்துக்கு வா: சாயந்திரம் இந்நேரத்திற்கு."

தோட்டம்பட்டித் தட்டான் சூரப்பாசாரியின் வீடு.

"ஆசாரி, இதை உருக்கித் தா!" என்றான் தேசிகன்.

ஊதுகுழலைக் கீழே வைத்து ஆசாரி காசுமாலையை வாங்கிப் பார்த்து,"சாமி, இது நம்ம குப்புச் செட்டியார் வீட்டுச் சாமான்" என்றான்.

இருக்கலாம், எதுவானாலும் என்ன? சீக்கிரம் உருக்கித் தா!" என்றான் வேதாந்த தேசிகன்.

குப்புச் செட்டியார் வேதாந்தனுக்கு சிநேகிதம். அந்தச் செட்டியாருக்கும் திருட்டுக்களில் பங்கு உண்டு.

"களிமண் சரியாயில்லை. நாளை வாருங்கோ உருக்கித் தருகிறேன்" என்றான் ஆசாரி.

சரியென்று சொல்லி தேசிகன் வெளியே போகப் புறப்பட்டான்.

ஆசாரி:—"நகையை எடுத்துப் போங்கள்; நாளை வாருங்கள். உங்கள் எதிரிலேயே உருக்கித் தாரேன்."

தேசிகன்:—"உன்னிடமே இருக்கட்டும் ஆசாரி! வரும்போது ஒரு பூனை குறுக்கிட்டது."

அப்பொழுது கதவு திறந்த ஓசை கேட்டது.

சப் இன்ஸ்பெக்டர் வீராசாமி அய்யரும் இரண்டு ஆட்களும் உள்ளே புகுந்தார்கள்.

"அப்பனே, பூனை குறுக்கிட்டது உண்மை; வா!" என்று சப் இன்ஸ்பெக்டர் வேதாந்த தேசிகனை அரெஸ்டு செய்துகொண்டு போய்விட்டார்.

எத்தனையோ களவுகளில் உண்மையில் சேர்ந்திருந்தும் அவைகளில் எல்லாம் தப்பி, தான் சேராத இந்தக் குப்புச் செட்டியார் வீட்டுக் கன்னக்களவு கேசு விசாரணையாகி தேசிக தாதாசாரியாருக்குத் தவறாது ஆறு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

நல்ல குலத்தில், பண்டிதர் குலத்தில் பிறந்த இவன் எப்படிக் கன்னக் களவுகள் நடத்தித் திருடன் ஆனான் என்பதே கோர்ட்டில் எல்லோரும் பேசிய பேச்சு.

"ஜன்மாந்தர கர்மம்" என்றார் வக்கீல் கல்யாண ராம அய்யர், கிழவர்.

"அதெல்லாம் பொய், இதற்குக் காரணம் வேறு" என்றார் பொது உடைமை குப்புசாமி அய்யர், புது வக்கீல்.



# ராஜா மாடசாமியின் தீர்ப்பு

**பா**ண்டியனுக்குக் கப்பங் கட்டி வந்த குறுநில மன்னர் பலர். அவர்களில் ஒருவன் முருக நாட்டு ராஜா. முருக நாட்டு மன்னர்கள் மிகத் திறமையாக ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள். சின்ன சுந்தரதேவன் பல வருஷங்கள் சிறப்பாக ஆண்டான். மதுரைப் பாண்டியனுக்கு அவனிடம் மிக்க அன்பு.

அவனுக்கு மூன்று மனைவிகள். இருந்தாலும் துரதிருஷ்டம் காரணமாக அவனுக்கு ஆண் சந்ததி உண்டாகவில்லை. ஆனபடியால் சின்ன மனைவியின் மாமன் மகன் மாடசாமித் தேவனைத் தத்து மகனுக எடுத்து வளர்த்து வந்து, அவனையே இளவரசனுக்கினுன்.

சுந்தரத் தேவன் இறந்த பின் மாடசாமி பட்டத்துக்கு வந்துவிட்டான். யார் எப்படிச் சொன்னுலும் அப்படிக் கேட்பான். இவ்வளவு நல்ல ராஜா நமக்குக் கிடைத்தானே என்று முருக நாட்டுப் பெரியோர்கள் எல்லோரும் மிகத் திருப்தி அடைந்தார்கள்.

பெரியபுரத்தில் (அதுதான் முருக நாட்டுத் தலை நகரம்) ஒரு நாள் ஓர் ஏழைப் பிராமணன் வீட்டில் திருடன் கன்னம் வைத்தான். புது வீடு, மண் சுவர். சுவரில் பொந்து செய்து திருடன் உள்ளே நுழைந்தான். வழக்கம்போல் முதலில் கால் உள்ளே செலுத்

திப் புகுந்தான். தலை உள்ளே போவதற்குள் சுவர் 'பொத பொத' வென்று விழுந்து, கழுத்து அகப்பட்டுக்கொண்டு மூச்சு விடவும் தப்பித்துக் கொள்ளவும் முடியாமல் அங்கேயே செத்துப் போனான். திருடனுடைய மனைவி மிகத் துக்கப்பட்டுத் தன் இரண்டு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு ராஜாவிடம் சென்று வழக்குப் போட்டாள். "பிராமணன் என் வீட்டுக்காரனைக் கொன்றுவிட்டான். விசாரிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள்.

"என்ன நடந்தது, சொல்!" என்று அரசன் கேட்க,

"ராஜாதி ராஜாவே! என் கணவன் இந்தப் பிராமணன் வீட்டில் கன்னம் வைத்தான். சுவர் 'பொத்' 'பொத்' தென்று விழுந்து என் புருஷன் அதில் சிக்கிச் செத்துப் போய் விட்டான். இப்படி ஈரச் சுவர் வைத்திருக்கலாமா? உங்கள் அரசாங்கத்தில் இப்படிக் கொலை நடக்க விடுவீர்களா? இனி நான் எப்படிப் பிழைப்பேன்? பிராமணனைத் தருவித்து நீதி செய்யுங்கள். துரையே!" என்று முறையிட்டாள்.

ராஜா பிராமணனைப் பிடித்து வர உத்தர விட்டான். சேவகர்கள் போய்ப் பிராமணனைப் பிடித்து அழைத்து வந்தார்கள்.

"ஓய்! பிராமணரே! உம் வீட்டில் இந்த ஏழையின் புருஷன் கன்னம் வைத்தான். அவன்மேல் உம்முடைய வீட்டுச் சுவர் விழுந்து செத்துப் போனான். அதற்கு நீதான் காரணம். அவன் குடும்பம் கஷ்டப்

படுகிறது. நீர் இருபது வராகன் அந்தத் திருடன் மனைவிக்குத் தரவேண்டும். இல்லாவிட்டால் சிறைச் சாலை" என்றான்.

"ஐயோ, நான் ஏழை. என்னிடம் இருபது வராகன் ஏது? ஐந்து வராகன்தான் ஏது? சிறைச்சாலையில் கொடுக்கும் கஞ்சியைக் குடித்து எப்படிப் பிழைப்பேன்? நான் ஒரு தவறும் செய்யவில்லையே! அந்தப் பாழும் சுவர் வைத்த ஒட்டனைத் தண்டியுங்கள். அவன் வைத்த ஈரச் சுவர் இப்படி மோசம் செய்து விட்டது. கன்னம் வைத்தால் சுவர் விழுந்து போகும்படி கட்டியது அவன் தவறு" என்று கூறினான் பிராமணன்.

"பிராமணன் சொல்லுவது நியாயமே, மந்திரி! ஒட்டப் பயலை இங்கே வரவழை, விசாரிக்கலாம்" என்றான் ராஜா.

ஒட்டன் திம்மனைச் சேவகர்கள் பிடித்து வந்தார்கள். "ஐயோ, நான் என்ன செய்வேன், மகாராஜா! மண்ணுக்குத் தண்ணீர் ஊற்றிய அந்த சிற்றாள் மோசம் செய்து விட்டான். ஜலம் அதிகமாக வார்த்து விட்டான். இது அவன் பிசகு; அவனை அழைத்துத் தண்டியுங்கள்" என்று சொன்னான் ஒட்டன் திம்மன்.

அரசன் யோசித்தான். "இதுவும் நியாயமாகவே இருக்கிறது, மந்திரி! தண்ணீர் ஊற்றியவனைப் பிடித்து வரச் சொல். அவனால் அல்லவோ இந்த ஏழைத் திருடனுடைய உயிர் போகும்படி நேரிட்டு விட்டது?" என்றான்.

அவனும் வந்தான். மிகப் பயந்து நடுங்கிக் கொண்டே பேசினன். "உண்மை; நான் தண்ணீர் அதிகமாகத்தான் வார்த்து விட்டேன். அதனுல்தான் மண் அதிக ஈரமாகப் போய்விட்டது. ஆனுல் நான் என்ன செய்ய முடியும்? தண்ணீர் மொண்டு வந்த பானை பெரிதாக இருந்தது. அதனுல்தான் இந்த ஆபத்து நேர்ந்தது. பானை செய்த அந்தப் பாவிக் குயவன்தான் இதற்கு ஜவாப்தாரி" என்று அழுதான்.

"இந்தச் சிறுவன் சொல்லுவதும் நியாயமாகத் தான் தோன்றுகிறது! மந்திரியே, அந்தக் குயவனைப் பிடித்து வரச் சொல்!" என்ருன். சேவகர்கள் போய்க் குயவனைப் பிடித்து வந்தார்கள்.

"ஏனடா, குயவா! நீ பானையைப் பெரியதாகச் செய்துவிட்டது. உண்மையா, இல்லையா? பொய் சொல்லாதே! அதனுல் ஓர் ஏழை இறந்தான். தண்டனைக்குத் தயாராவாய்!" என்ருன் அரசன்.

"ஐயோ, மன்னிக்கவேண்டும், அரசே! நான் செய்தது தவறு என்று ஒப்புக்கொள்ளுகிறேன். பெருமாள் கோயிலில் விளக்கு ஏற்றுகிற அந்த மீனுட்சி அன்று தெருவில் கிழக்கும் மேற்கும் போவதும் வருவதுமாக இருந்தாள். பானை செய்யும் போது அவளைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டேன். அதனுல் பானை கொஞ்சம் பெரியதாய்ப்போய் விட்டது. அந்தக் குலுக்குக்காரி மீனுட்சியைக் கொண்டு வந்து தண்டியுங்கள்" என்ருன் குயவன்.

இந்தக் காரணத்தைக் கேட்ட ராஜா குயவன் பேரில் பரிதாபம் கொண்டான். "அழைத்து வா அந்த மீனாட்சியை!" என்று கூறினான்-

குயவனே போய் மீனாட்சியை அழைத்து வந்தான்.

"ராஜாவே! எனக்குப் பயமாயிருக்கிறது. ஏன் எனக்கு இந்த உத்தரவு?" என்று கேட்டாள் மீனாட்சி.

"குயவன் பானை செய்து கொண்டிருந்தபோது நீ அனாவசியமாகத் தெருவில் ஏன் இப்படியும் அப்படியும் நடந்து அவன் கவனத்தைக் கெடுத்தாய்? இந்த ஏழைப் பெண்ணின் குடும்பம் உன்னால் கெட்டதல்லவா?" என்று அவளுக்கு நடந்ததையெல்லாம் விவரமாக எடுத்துச் சொன்னான்.

மீனாட்சி, "ஐயோ, இப்படியாயிற்றா? இப்படியாகும் என்று நான் கொஞ்சமும் எண்ணவில்லை. என் புடவை வண்ணாத்திக்குக் கொடுத்திருந்தேன். அவள் தாமதப் படுத்திவிட்டாள். எனக்கு உள்ள நல்ல புடவை ஒன்றே; அடுத்த நாள் கோயிலில் திருவிழா. ஊரெல்லாம் கோயிலில் கூடும். நான் சலவைக்குப் போட்டிருந்த புடவையை வண்ணாத்தி 'தருகிறேன் தருகிறேன்' என்று ஏமாற்றி வந்தாள். ஆகவே வண்ணாத்தி வீட்டுக்கே போய்க் கேட்கும்படியாகி விட்டது. அவள் வீட்டுக்குப் போக வேண்டுமானால் குயவன் வீட்டு வழியாகத்தான் போகவேண்டும். அதுவும் பலதடவை போக வேண்டியதாயிற்று. ஆகவே மகாராஜா என்னை மன்னிக்கவேண்டும்.

அந்தப் பாவி வண்ணாத்தியையும் தயவு செய்து விசாரியுங்கள்” என்றாள்.

“இவள் சொல்லுவது உண்மை போலிருக்கிறது. அந்த வண்ணாத்தியைத் தருவியுங்கள்” என்று அரசன் வண்ணாத்தியின் பேரில் கோபங்கொண்டு மந்திரிக்கு உத்தரவிட்டான்.

வண்ணாத்தி சின்னம்மாளும் வந்தாள். “சுவாமி! இந்த மீனாட்சி சொல்வது உண்மை. இவளுடைய சேலையைத் துவைக்கத் தாமதமாகி விட்டது. ஆனால் அது என் தவறல்ல. நான் அப்படி ஒருநாளும் தாமதிக்க மாட்டேன். ஆற்றில் துணி துவைக்கும் கல்லின்மேல் ஒரு சாமியார் உட்கார்ந்து கொண்டே யிருந்தார். ஜபம் செய்து வந்தார். அவரை எப்படி நான் ‘எழுந்து போ’ என்று சொல்லுவது? நான் போனபோதெல்லாம் அந்தக் கல்மேலேயே அவர் உட்கார்ந்து மூக்கைப் பிடித்துக் கொண்டிருந்தார். அவரைக் கூப்பிட்டு விசாரியுங்கள்” என்றாள்.

முருகநாட்டுராஜா உடனே உத்தரவிட்டான்.

“அந்தச் சாமியாரை எங்கேயிருந்தாலும் பிடித்து அழைத்துக் கொண்டு வாருங்கள்!” என்று கூறினான்.

சாமியாரை அழைத்து வந்தார்கள். சாமியார் அப்போது மௌன விரதத்திலிருந்தார். என்ன கேட்டாலும் ஒன்றுக்கும் பதில் பேசவில்லை. தலை அசைத்துக் கொண்டு சும்மா நின்றார்.

"குற்றத்தை மறுக்கவில்லை. கொண்டுபோ. இந்தச் சாமியாரைச் சிறைச்சாலைக்கு!" என்று ராஜா உத்தரவு பிறப்பித்து விட்டான்.

அரசன் ஆணைப்படி, பாவம் சாமியார் சிறைச் சாலையில் அடைக்கப்பட்டார்.

அடுத்த கூரைநாட்டு ராஜாவுக்கு இந்தச் சாமியாரிடத்தில் மிகுந்த பக்தி. இந்தச் சமாசாரம் அவனுக்கு எட்டியதும் கோபம் கொண்டு, முருக நாட்டின்மீது படையெடுத்துக் கோட்டைக்குள் புகுந்து நாட்டைத் தன் வசப்படுத்திக் கொண்டு விட்டான். மாடசாமியைச் சிறையில் அடைத்து விட்டு, தூதர்களை அனுப்பிப் பாண்டியனுக்கும் செய்திகளை வினயமாகத் தெரிவித்து விட்டான். முருகநாடு கட்ட வேண்டிய கப்பத்தைத் தானே கட்டி விடுவதாகச் சொன்னபடியால் பாண்டிய மன்னனும் அதற்கு ஒப்புக் கொண்டான்.

# ரத்தினம் பிள்ளையின் துறவு

"ஐயோ, பாவம்! ரொம்பவும் அநியாயம்!" என்று சென்னைப் பட்டினத்தில் எல்லாப் பக்கங்களிலும் குமாஸ்தாக்களும், உத்தியோகஸ்தர்களின் மனைவிமார்களும்-பேசிக் கொண்டார்கள்.

போலீஸ் பஞ்சாயத்து விசாரணையும் வைத்திய சோதனையும் எல்லாம் ஒரே முடிவுக்கு வந்தன:

ஸ்ரீமான் புருஷோத்தம நாயுடு ஜூன் மாதம் இருபத்தி நான்காம் தேதி பாஷாணம் உட்கொண்டு தற்கொலை செய்து கொண்டார். காரணம் முப்பது வருஷம் சர்க்காருக்கு யோக்கியமாகவும் சாமர்த்தியமாகவும் புகழுடனும் தொண்டு செய்து வந்தவர். அவருடைய இலாக்காவுக்குச் சிகரமான உயர்ந்த பதவி கிடைக்கும் சமயத்தில் திடீர் என்று ஒரு மொட்டை விண்ணப்பத்தின் பேரில் லஞ்சக் கேசு தொடரப்பட்டதுதான்.

விசாரணைகள் எல்லாம் முடிந்து தீர்ப்புச் சொல்லப் போகும் தறுவாயில் மானத்துக்குப் பயந்து நாயுடு தற்கொலை செய்து கொண்டு விட்டார். ஆனால் அவர் உயிர் நீத்த இரண்டாவது நாளில் தீர்ப்பு அவருக்கு அனுகூலமாகவே கொடுக்கப் பட்டது. 'லஞ்சக் குற்றம் ஏதும் ருசுவாகவில்லை. யோக்கியமான உத்தியோகஸ்தர்மீது புகார் செய்தது சில விரோதிகளின் சூழ்ச்சி' என்று அவர்

கௌரவத்துக்குச் சிறிதும் களங்கம் ஏற்படாமல் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

யாரோ தெரியவில்லை; தீர்ப்பு பிரதிகூலமாகப் போகிறது என்று புருஷோத்தம நாயுடுவுக்கு ரகசியமாக டெலிபோனில் விஷயம் தெரியப்படுத்தியதாகவும், அதன் மேல் அவர் உள்ளம் கலைந்து, இம்மாதிரி உயிர் நீக்கிக் கொண்டார் என்றும் போலீசு அதிகாரிகள் முடிவு செய்தார்கள். பிரேதப் பரிசோதனையில் வயிற்றில் பாஷாணமும் காணப்பட்டது.

'இப்படியாயிற்றே!' என்று ரத்தினம் பிள்ளை மிகவும் வருத்தப்பட்டார். இவர் ஒரு பெரிய தர்ம சங்கடத்தில் சிக்கி யிருந்தார். ரத்தினம் பிள்ளை, உத்தியோக பரம்பரையில் புருஷோத்தம நாயுடுவுக்கும் அடுத்த ஸ்தானத்திலிருந்தவர். நாயுடு அவர்களுக்கு ஆகியிருக்க வேண்டிய பெரிய உத்தியோகம் அவர் இறந்துவிட்டபடியால் ரத்தினம் பிள்ளைக்கு உரிமையாயிற்று.

"இந்த ஸ்தானம் எனக்கு வேண்டாம், என் மனம் பெரும் கொந்தளிப்பில் இருக்கிறது. அன்று சாயங்காலம் நானும் காலம் சென்ற புருஷோத்தம நாயுடுவும் தேநீர் சாப்பிட்டோம். 'உங்களுடைய கேசு அனுகூலமாக முடியும்; உங்களுக்கு ஏற்பட்ட கஷ்டம் நீங்கிவிடும்' என்று சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தேன். பிறகு இந்தத் துக்ககரமான சம்பவம் ஏற்பட்டுவிட்டது. அதன் லாபத்தை நான் அடைவது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை' என்று இலாக்கா நிர்வாகஸ்தருக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதியனுப்பினர்.

இதைச் சர்க்கார் மிகவும் பாராட்டிய போதி லும், உத்தியோக முறைகளில் இந்த மாதிரியான உணர்ச்சிகளுக்கு இடமில்லை. டைரக்டர் வேலையை நீர்தான் ஒத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லி விட்டார்கள். அவரும் மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டு வேலையில் அமர்ந்தார்.

பஞ்சாயத்து விசாரணையில் ஒரு கடுதாசி ஒப்பு விக்கப்பட்டது. அது ஒரு ஜோஸ்யருடைய கடிதம். அதன் விவரம்:

**உங்களுடைய ஆபத்து இந்த மாதம் அமா வாசையில் உச்ச நிலை அடையும். நீதிபதி உங்களுக்கு விரோதமாகத் தீர்ப்புக் கூறினாலுங்கூட அதற்கு விமோசனம் பிறகு உண்டு. நன்றாகப் பரிசீலனை செய்து இதை எழுதினேன். தைரியமாக இருக்க லாம். மனோவேதனை வேண்டாம்.**

இப்படிக்கு,
**ஜோதிஷம் வெங்கட்ராமய்யர்.**

இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் ஸ்ரீமான் நாயுடு அவமானத்துக்குப் பயந்து தற்கொலை செய்து கொண்டு விட்டார் என்று விசாரணை புரிந்த பஞ்சா யத்தார்கள் அபிப்பிராயம் கொடுத்து விட்டார்கள். "யோக்கியமாக வேலை செய்யும் உத்தியோகஸ்தர் களுக்கு இந்தப் புது லஞ்சக் கோர்ட்டுகளினால் ஒரு பெரும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. இந்தக் கோர்ட் டுகளை உடனே நீக்கிவிட வேண்டும்" என்று உத்தி யோக வட்டாரங்களில் தீவிரமான பேச்சு நடந்தது. சிலர் "அது என்ன நியாயம்? அனாவசியமாக வீண்

பயம் ஒருவர் உண்டாக்கிக் கொண்டு பிராணத் தியாகம் செய்துகொண்டதனுல் லஞ்ச விசாரணையே வேண்டாம் என்று சொல்லி விடலாமா?" என்று வேலையிலிருந்து விலகிப் 'பென்ஷன்' வாங்கி வரும் பூதிபதிகள் எதிர்வாதம் செய்தார்கள்.

  

போலீஸ் இன்ஸ்பெக்டர் தீனதயாளுவுக்குத் திருப்தி ஏற்படவில்லை. "இந்த விசாரணையின்போது உண்மை வெளியாகவில்லை. இன்னும் பார்த்துப் பரிசீலனை செய்யவேண்டிய விஷயங்கள் இருக்கின்றன" என்று ரகசிய போலீஸ் இலாகாவுக்கு ஒரு நீண்ட யாதாஸ்து தயார் செய்து அனுப்பினுர்.

"இந்த வேலையை நீரே செய்யலாம்" என்று அவருக்குத் தாக்கீதும் வந்தது.

தீனதயாளு அவ் வேலையை மேற்கொண்டு ஒரு வருஷம் பெருமுயற்சி எடுத்தார். ஆனுல் புலன் ஒன்றும் திருப்திகரமாக வெளியாகவில்லை.

இன்ஸ்பெக்டர் தீனதயாளுவைப்பற்றி ரகசிய போலீஸ் இலாகாவில் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். தீனதயாளு பல ஜோஸ்யர்கள் வீட்டுக்குப் போய் வருவதைப் பார்த்து, "இவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது, ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று ஜோஸ்யர்களிடம் சென்று உதவி தேட ஆரம்பித்திருக்கிறுர்" என்று எகத்தாளம் செய்தார்கள். ஆனுலும் தீனதயாளு இதற்கெல்லாம் மனம் தளரவில்லை.

இன்னும் ஆறுமாதம் ரகசிய விசாரணையிலேயே கழித்தார். பிறகு ஒரு ரிப்போர்ட்டும் அனுப்பி வைத்தார். நூறு பக்கம் கொண்ட அந்த ரிப்போர்ட்டின் முக்கிய அம்சம் வருமாறு:

புருஷோத்தம நாயுடு விஷம் அருந்தி இறந்தார் என்பது உண்மை. ஆனல் அது தற்கொலையல்ல. அவருக்குப் போட்டியாக நின்ற ரத்தினம் பிள்ளை தேநீரில் விஷத்தைக் கலந்து புருஷோத்தம நாயுடுவை அருந்தச் செய்தார். அதனல் இறந்தார். இறப்பதற்கு முன்னமே லஞ்சக் கேசு விசாரணையைப் பற்றி நாயுடுவுக்கு அனுகூலமான தகவல் எட்டியதாக ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது.

ஆனபடியால் தற்கொலைக்குக் காரணமே இருக்கவில்லை. இது 'டைப்' செய்யும் குமாஸ்தா என்னிடம் கொடுத்த சாட்சியத்தினல் சந்தேகமற ஊர்ஜிதமாகிறது. ஆகவே புருஷோத்தம நாயுடுவின் மரணமானது தற்கொலையல்ல.

ரத்தினம் பிள்ளையைப் பற்றிப் பல விஷயங்கள் சந்தேகத்துக்கு இடம் தரக்கூடியவைகளாக, இருக்கின்றன. லஞ்சக் கேசுத் தீர்ப்பு யாதாஸ்து ஒன்று டைபிஸ்ட் குமாஸ்தா மூலம் அவர் கைக்கு இருபத்திரண்டாம் தேதியே கிடைத்ததாகத் தெரிய வருகிறது. இவர் அதற்குமுன் பல தடவை ஒரு சோதிடரிடம் சென்று தன் ஜாதகத்தைக் கொடுத்து ஆருடம் கேட்டு வந்திருக்கிருர். அந்தச் சோதிடர் இவருக்கு ஒரு பெரிய வேலை இந்தத் தேதியில் காயமாகும் என்று ஆருடம் பார்த்துச் சொல்லியிருக்

கிறார். சோதிடர் சொன்னவாறே நடந்ததென்று மகிழ்ச்சியடைந்து சோதிடருக்கு ஐம்பது ரூபாய் இனும் வேறு கொடுத்து இருக்கிறார். பிறகும் ஆருடம் பல தடவை கேட்டு வந்திருக்கிறார் என்றும் நிச்சயமாகத் தெரிகிறது. தமக்கு ஏதாவது அபாயம் உண்டா என்று சோதிடர்களைக் கேட்டு வந்திருக்கிறார்.

"அபாயமான ஒரு காரியம் நீர் தைரியமாகச் செய்வீர். அதனின்று உமக்கு ஒரு பெரிய உத்தியோகம் கிடைக்கும்" என்று ஒரு சோதிடர், அவருக்குக் கடிதம் மூலமாகத் தெரிவித்திருக்கிறார். இந்தக் கடிதத்திற்கு நகல் அந்தச் சோதிடர் வீட்டில் இருக்கிறது. இது ஜூன்மாதம் பத்தாம் தேதி எழுதப்பட்டது. இதற்காக நூறு ரூபாய் சோதிடருக்கு ரத்தினம் பிள்ளை அனுப்பியதாகவும் தெரிகிறது. சோதிடரும் என்னிடம் வாக்குமூலம் கொடுத்திருக்கிறார். ரத்தினம் பிள்ளைக்குத் தவறான ஆசையும் நம்பிக்கையும் ஏற்பட்டு இந்த பாப காரியத்தைச் செய்துவிட்டார் என்று வியத்தமாகத் தெரிகிறது. இருபத்தி நான்காம் தேதியன்று மாலை நான்கு மணிக்கு ரத்தினம் பிள்ளை தேநீர் அருந்தப் புருஷோத்தம நாயுடு வீட்டுக்குப் போனார் என்றும், அங்கே இருவரும் தனியாக ஓர் அறையில் தேனீர் அருந்திக் கொண்டிருந்த சமயம், ஆபீஸ் அறையில் டெலிபோன் மணியின் ஓசை கேட்டது என்றும், நாயுடு டெலிபோன் பேச ஆபீசு அறைக்குச் சென்றார் என்றும், அந்தச் சமயமே தகுந்த சந்தர்ப்பம் என்று ரத்தினம் பிள்ளை நாயுடுவின் தேநீர்க் கோப்பையில்

பாஷாணத்தைப் போட்டுக் கலக்கிவிட்டார் என்றும் நாயுடு திரும்பி வந்து "லஞ்சக் கேசு முடிவடைந்து விட்டது; அனுகூலமாகத் தீர்ப்பு எழுதி விட்டார்கள். 'டைப்' அடிக்கும் குமாஸ்தா சொன்னார்" என்று ரத்தினம் பிள்ளையிடம் சொன்னதாகவும் விஷயம் தெரிகிறது.

இதைக் கேட்ட ரத்தினம் பிள்ளை, "மங்களம்! மங்களம்!" என்று வெள்ளைக்காரர் வழக்கப்படி உரக்கக் கூறித் தேனீர் குடித்தார்.

"உங்களுக்கும் மங்களம்!" என்று சொல்லிப் புருஷோத்தம நாயுடுவும் தம் கோப்பையை எடுத்துக் குடித்துவிட்டார். உடனே ரத்தினம் பிள்ளை வீட்டுக்குத் திரும்பினார்.

இந்த யாதாஸ்துக்கு அனுபந்தமாகத் தாம் சம்பாதித்த ஆதாரங்களையெல்லாம் தீனதயாளு வரிசைக்கிரமமாகச் சேர்த்து அனுப்பினார். புருஷோத்தம நாயுடு வீட்டில் ஒரு வேலைக்காரி — அவளுடைய பெயர் மங்களம்—இவளுடைய வாக்குமூலம் முக்கியமான அனுபந்தமாக வைக்கப்பட்டிருந்தது.

* * *

இதற்குள் ரத்தினம் பிள்ளை புது உத்தியோகத்தில் இன்னும் ஒரு படி உயர்வு பெற்றார்.

சர்க்கார் இன்ஸ்பெக்டர் தீனதயாளு ரிப்போர்ட்டை ஒரு மாதம் பரிசீலனை செய்து, "இப்படியும் நடந்திருக்கலாம். ஆனால் ஊகத்தை ஆதாரமாகக் கொண்டே பல விஷயங்கள் கோக்கப்பட்டிருக்கின்றன. சந்தேகத்துக்கு இடம் ரொம்ப இருக்கிறது.

ஆயினும் நீதி மன்றத்தில் வழக்கு நிற்காது. காலமும் ரொம்பச் சென்றுவிட்டது. இந்த விஷயம் மறு விசாரணைக்குத் தகுந்ததல்ல" என்று எழுதி முடித்து விட்டார்கள்.

பத்து வருஷங்கள் சென்றன. இதற்குள் பல சம்பவங்கள் ரத்தினம் பிள்ளையின் வாழ்க்கையில் நிகழ்ந்துவிட்டன. அவர் மனைவி காரணமின்றித் திடீர் என்று காலமானர். பிறகு அவருடைய இரண்டு மக்களும் ஒருவர் பின் ஒருவராக நோய் வாய்ப்பட்டுக் காலமாயினர். இந்தச் சோகம் தாங்க முடியாமல், வேலையிலிருந்து ஓய்வு பெற்று இமய மலையில் சுவாமி பரமானந்தர் ஆசிரமத்தில் செம்மண் துணி தரித்து உபதேசம் பெற்றுக்கொண்டு காலம் கழித்து வந்தார். தம் சொத்தையெல்லாம் குஷ்ட ரோக நிவாரணத்துக்கு எழுதி வைத்து விட்டார்.

தீனதயாளும் அதே ஆசிரமத்தில் ஒரு பக்தராக இருந்தார்.

ஒரு நாள் மாலை அவரிடம் ரத்தினம் பிள்ளை, "சோதிடம் கேட்பது பாபம் என்று பெரியோர்கள் சொல்லியிருப்பது மிகவும் உண்மை. நடப்பது நடக்கும் என்று ஆண்டவனுக்கு விட்டு விடாமல் வருங்கால ரகசியங்களில் பிரவேசித்தால் பாப எண்ணங்கள் உண்டாகும். ஆசைகளும், அதற்கான அக்கிரமச் சூழ்ச்சிகளும் ஒன்றன் பின் ஒன்ருகத் தோன்றும். பாழும் பள்ளத்தில் வீழ்வோம்" என்ருர்.

"ஆமாம், சுவாமி!" என்ருர் ஸ்ரீமான் தீன தயாளு.

தாம் செய்த ரிப்போர்ட் சரியானதுதான் என்று தீனதயாளு மனத் திருப்தியும் அடைந்தார்.

முதலில் உள்ளத்தில் ஒரு எண்ணம் உண்டாகிறது, அதைத் திரும்பத் திரும்ப நுகர்ந்து மகிழ்ச்சி அடைகிறோம். அதன் பயனாக ஓர் ஆசை தோன்றுகிறது. அந்த ஆசை கொஞ்சம் கொஞ்சமாக வேகம் அடைந்து உள்ளத்தைக் கவர்ந்த ஒரு நெருப்பாகி விடுகிறது. அதன் பயனாக நாம் படித்த படிப்பும் அடைந்த அறிவும் தேய்ந்து சூன்யமாகிப் போய் பாப புண்ணிய உணர்ச்சி நாணம் எல்லாம் அழிந்து போகின்றன. முடிவில் விநாசம். இதைக் கீதாச்சாரியன் எடுத்துக் காட்டியிருக்கிறான்.

ஒரு துராசைக்கு உள்ளத்தில் இடம் கொடுத்தால் இவ்வாறு படிப்படியாக கெட்டுவிநாசம் அடைகிறோம். ஆசையுடன் சோதிடமும் சேர்ந்துவிட்டால் சொல்லவும் வேண்டுமா?

சோதிடத்தில் உண்மை உண்டா, என்பதல்ல கேள்வி. உண்மையாக இருக்கலாம்; பொய்யாக இருக்கலாம்; இரண்டும் கலந்ததாகவும் இருக்கலாம். அதில் பாப வினைக்கு நிறைய இடம் உண்டு என்பதே நமக்குப் போதும். இந்த விஷயத்தை விளக்குவதற்காகக் கதை எழுதப்பட்டது. வெறும் பொழுது போக்குக்கு எழுதவில்லை. பொழுது தானாகவே போகும்; அதை யாரும் போக்க வேண்டியதில்லை!

# ஆடலும் பாடலும்

**மா**வடித்துறை வைத்திய நாதையர் பெரிய சங்கீத வித்துவான். தற்போது விருத்தாப்பியம் தொழிலை நிறுத்தி நான்கு வருஷங்கள் ஆயின. அவர் சம்பந்தி சேஷாசலையர் பள்ளிக்கூட ஜில்லா இன்ஸ் பெக்டர்.

"என்ன ஐயர்வாள்? இந்த வருஷம் கச்சேரிகள் எப்படி?"

"அதைப்பற்றிக் கேட்க வேண்டுமா? பிரமாத மாகத்தான் இருந்தன" என்றார் வைத்தியநாதையர்.

"சங்கீதக் கலையைப்பற்றித் தங்கள் அபிப் பிராயம் என்ன? முன் நாட்களைவிட இப்போது ரொம்ப அபிவிருத்தி என்பது என் அபிப்ராயம்" என்றார் சேஷாசலையர்.

"ஆடலும் பாடலும் தொழில்களாகப் போய் விட்டிருக்கின்றன; வியாபாரச் சரக்காகிப் போய்விட் டிருக்கின்றன என்று சொன்னாலும் மிகையாகாது' ஏன்றார் வைத்தியநாதையர்.

"அதனால் என்ன கெடுதல்? நல்லதுதானே?" என்றார் இன்ஸ்பெக்டர்.

"தொழில் முறையும் வியாபாரப் போட்டியும் பொருள்களைச் சிறப்புறச் செய்யும் என்பதில் சந்தேகம் இல்லை. நல்ல முறையில் நல்ல பண்டங்

களை ஆக்கி விற்பனையில் முதன்மை பெறவேண்டும் என்கிற இடைவிடாத போட்டியினால் நல்ல அபிவிருத்தி உண்டாகும். அவ்வாறு ஆக்கப்பட்ட பண்டத்தை ருசித்து அனுபவித்த மக்களும் அநுபவத் திறமை அடைவார்கள். இக்காரணத்தினால் ஆடலும் பாடலும் தற்காலத்தில் நல்ல வளர்ச்சி பெற்றிருக்கின்றன. பொது மக்களும் அவற்றை அநுபவிப்பதில் தீவிர ஆர்வம் கொண்டிருக்கிறார்கள்.

"ரொம்பச் சரியாகச் சொல்லுகிறீர்கள். அதுவே என் அபிப்பிராயம்" என்றார் சேஷாசலையர்.

மாவடித்துறை ஐயர்வாள் தலை அசைத்துத் தடுத்தார்.

"இவை எல்லாம் உண்மையே. ஆயினும் இந்த நிலைமை உள்ளத்திற்குத் திருப்தி தரவில்லையே! கலையின் தன்மைக்கும் விலை முறைக்கும் ஏதோ முரண்பாடு இருப்பதாகவே தோன்றுகிறது. கலையைத் தொழிலாகச் செய்து ஆடலையும் பாடலையும் விற்பனைச் சரக்குகளாகவே வழங்க விட்டுவிட்டால் கலைகள் கெட்டுப் போகும் என்று பயமாக இருக்கிறது. கெட்டுப் போனாலும் கெட்டுப் போனதை நாம் அறியவும் மாட்டோம். கெட்டுப் போனதையே அழகு என்றும் மேலானது என்றும் நினைப்போம். இது தீமையிலும் தீமை."

"உங்கள் அபிப்பிராயம் விளங்கவில்லை. என்ன செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் சேஷாசலையர்.

வைத்தியநாதையர்: "சொல்லுகிறேன் கேளுங்கள். ஆடலையும் பாடலையும் கச்சேரிகளிலிருந்து வீடுகளுக்குக் கொண்டு வரவேண்டும். இந்தக் கலைகளுக்கு முக்கியமான காப்பு குடும்ப வாழ்க்கை குடும்பங்களிலிருந்து வெளிப்படுத்தப்பட்டு பாடலும் ஆடலும் தற்போது வனவாசம் செய்கின்றன என்றே சொல்லலாம். கோவில்களிலும் வீடுகளிலும் இடம் பெற்று நிலைத்தால்தான் ஆடலும் பாடலும் நாட்டின் பண்பாட்டில் சேர்ந்த பொருளாகும். கச்சேரிகளில் மட்டும் நடந்து வந்தால் அது சிலருடைய பண்டமாற்றுச் சரக்காகுமே தவிர நாட்டின் செல்வமாகாது. பாடக் கற்ற தாய், தன் குழந்தைக்குப் பாடக் கற்றுக் கொடுக்க வேண்டும். ஆடலும் பாடலும் பயன் பெற்று, குடும்ப மகிழ்ச்சியாக உருவெடுத்துப் பொங்க வேண்டும். இதுவே கலையின் உண்மைப் போக்காகும். பொதுக் கச்சேரிகள் வேண்டாம் என்பதல்ல. அவற்றிேனாடு திருப்தியடையலாகாது என்பதுதான். ஹோட்டல்கள் இருந்த போதிலும் குடும்பச் சமையல் நடைபெற வேண்டும் அல்லவா? அதுபோல" என்றார்.

"வீட்டில் கோணலுங் குறுக்குமாகப் பாடுவதில் என்ன விசேஷம்? வித்துவான்கள் கச்சேரி நடத்தி நல்ல சுத்தமாகப் பாடுவதைக் கேட்பதில் என்ன தீமை? நீங்கள் சொல்லுவது புதிதாக இருக்கிறதே?'" என்றார் சேஷாசலையர்.

"நீங்கள் கல்வி முறையைப் பற்றி ரொம்பத் தெரிந்தவர்கள்; எனக்குத் தோன்றுவதைச் சொல்லுகிறேன்" என்றார் கிழவர்.

"நீங்கள் இப்படிச் சொன்னால் எனக்குச் சங்கோசமாகிறது. உங்கள் அநுபவம் என்ன? ஞானம் என்ன? நாங்கள் குழந்தைகள். நான்கு தலைமுறை வித்துவான்களின் குடும்பம் அல்லவா உங்களுடையது?" என்றார் சேஷாசலையர்.

வைத்தியநாதய்யர் பொடி டப்பியைத் திறந்து சம்பந்தியிடம் நீட்டினார்.

"எழுத்தறிவு நன்றாக நாட்டில் பரவினால் சிறு குழந்தைகளின் முதல் படிப்பு வீட்டிலேயே நடந்து விடும். பிறகுதான் பள்ளிக்கூடம் போக வேண்டியதாகும். இந்த நிலைமை ஏற்பட்டால் அதுதான் நாட்டில் எழுத்தறிவு பரவியதற்கு அடையாளமாகும். தாய், தகப்பன்மார்களுக்கு எழுத்தறிவு இல்லாத வரையில் குழந்தைகளை முதல் படிப்புக்கே பள்ளிக்கூடம் அனுப்ப வேண்டி நேரிடுகிறது. எழுத்தறிவு வளர்ந்து நன்றாகப் பரவின பிறகு வீடுகளும் குடும்பங்களுமே பள்ளிக்கூடங்களாகிவிடும். அதற்குத் தகுந்தவாறு படிப்பு முறைகளும் மாறுபடும். பொருள்களை யொட்டியும் விஷயங்களை யொட்டியும் ஆரம்பக் கல்விப் பயிற்சி நடக்கும். அதுதான் சரியான முறையும் ஆகும்."

"மேதாவி என்றால் நீங்கள்தாம்" என்றார் சேஷாசலையர்.

"ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்? என்ன நான் புதிதாகச் சொல்லி விட்டேன்?" என்றார் வைத்தியநாதய்யர்.

"நூதனமாகக் கல்வி இலாகாவில் தாங்கள் சொல்லுகிறபடியே இப்போது திட்டங்கள் போட ஏற்பாடு செய்து வருகிறார்கள். அவர்கள் கஷ்டப் பட்டுப் புதிதாகக் கண்ட தத்துவத்தை நீங்கள் வெகு சுலபமாகக் கண்டு சொல்லுகிறீர்களே என்றுதான் ஆச்சரியப்பட்டேன்" என்றார் சேஷாசலையர்.

"கூட்டம் கூட்டமாகக் குழந்தைகளைப் பள்ளிக் கூடங்களில் அடைத்து எழுத்தும் கணக்கும் சொல்லித் தருவது அவ்வளவு சரியான பயிற்சி முறை ஆகாது என்று எனக்குத் தோன்றுகிறது. அவ்வாறே ஆடலும் பாடலும், குடும்பத்திலேயே வளர்ச்சி பெற்றால் ஆடல் பாடல் பயிற்சி முறை இயற்கை முறையை அநுசரித்து வரும். சிரமமின்றி ஒருவரைக் கண்டு ஒருவர் பயிலுவார்கள். தானாகவே வருவது போலவும் தோன்றும். சிறு குழந்தை தமிழை எவ்வாறு கற்கிறது? இலக்கண முறைப்படி எழுத்தியலும் பதவியிலும் படிப்படியாகக் கற்றுப் புணரியல் விதிகள், வேற்றுமை உருபுகள் ஆகியவற் றைப் பற்றி ஆராய்ந்து தமிழ் பேசக் கற்றுக் கொள் வதாக இருந்தால் குழந்தைகளின் பாடு எவ்வாறு கும்! தாயினிடம் தமிழ் பேசக் கற்றுக்கொண்டு விட்ட பிறகு அல்லவோ தமிழர்கள் இலக்கண விதி களைக் கற்கின்றார்கள்? உருப் போடுகின்றார்கள்? மொழிகளைக் கூட்டிச் சொல்லவும் அதற்கு வேண்டிய எழுத்துக்களைச் சரியாக உச்சரிக்கவும் குழந்தைகள் கற்றுக் கொள்ளுவதற்குத் தாயினிடம் படிப்பது போதுமானால், ஆடல் பாடல் விஷயத்திலும் அவ்வாறே என்பதில் சந்தேகம் வேண்டியதில்லை."

"தாங்கள் சொல்லுவது ரொம்ப சரி, பிறந்த குழந்தையை நெடுங்கணக்குப் பயின்ற பின்பே பேசப் பழக்குவது என்றால் உருப்பட்டு வருமா? பேசுவதைவிடப் பாடுவதும் ஆடுவதும் கடினமானவை அல்ல; எளியனவேயாகும். தேக தரும ஆராய்ச்சிக்காரர்களுக்கு இது தெரியும். ஓரளவு பறவைகள் ஆடுகின்றன, பாடுகின்றன. மனிதனுடைய தனிப்பெரும் பேறு மொழியும் பேச்சும். அதன் பயிற்சி வீட்டில் தாயின் மடியில் அல்லவோ முற்றும் முடிவு பெறுகிறது? பள்ளிக்கூடத்தில் அல்ல. ஆடலும் பாடலுங்கூட அவ்வாறே வீட்டில் முடிவு பெறலாம் என்பது சரியே" என்றார் சேஷாசலையர்.

"இப்படிப் பயின்ற ஆடல் பாடலே நாட்டின் செல்வமாகும். தாய் தகப்பன்மாரிடமிருந்து குழந்தைகள் பாடக் கற்க வேண்டும். பேச்சுக்கு எழுத்தைப் போல் பாட்டுக்கு ஸ்வரங்கள். மொழியைக் கற்ற பின் மொழியின் எழுத்துக்களைப் பிரித்துக் கூட்டலாம். ஸ்வரங்களும் பாட்டைக் கற்ற பின்பு ஆராய வேண்டிய விஷயம்."

"எழுத்துப் பயிற்சி முறை தற்போது ஓரளவு சீர்திருத்தம் அடைந்திருக்கிறது. அதாவது பேசுவது முந்தியும் எழுத்தாகப் பிரிப்பது பிந்தியும் நடைபெறுகின்றன. குழந்தைப் பருவக் கல்வித் திட்டத்தில் இது பல நாட்கள் கழிந்தபின் நடைபெற்ற சீர்திருத்தம்."

"ஆடல் பாடற் பயிற்சி முறையும் இவ்வாறே சீர்திருத்தம் அடைய வேண்டும். தற்போது தலை

கீழாக நடைபெறுகிறது. இலக்கணம் முந்தியும் பொருள் பிந்தியுமாகச் சொல்லித் தருவது தவருன முறை. முதலில் பாட்டுக்களைப் பயிலச் செய்துவிட வேண்டும். பிறகே இலக்கணத்தில் இறங்க வேண்டும்.''

"இவ்வாறு செய்தால் பயிற்சி கெட்டுப் போகாதோ? ஸ்வரங்கள் அசுத்தமாகப் பழகி விடாதோ?" என்ருர் சேஷாசலையர்.

"ஒரு நாளும் கெடாது. பாட்டைப் பாடும் போது மனசில் உருவெடுக்கும் உணர்ச்சி அல்லவோ ஸ்வரத்தைக் கிளப்புகிறது? ஸ்வரம் படியாதவன் கூடச் சரியான ஸ்வரத்தைத் தாஞகவே பிடிப்பான். பாவமே ஸ்வரத்திற்கும் தாளத்திற்கும் மூலமாகும். இதைப் பற்றி பயமே வேண்டியதில்லை. இவ்வாறு செய்தால் பயிற்சி கெட்டுப் போகும் என்று பயப் படுவது தவறு. குழந்தை நன்ருகப் பேசக் கற்ற பின்னரே அது எழுத்தும் இலக்கணமும் கற்கிறது என்பதை ஆழ்ந்து ஆராய்ந்தால் இந்தப் பயம் நீங்கும், என்ருர் வைத்தியநாதையர்.

"மொத்தத்தில் நீங்கள் சொல்லுவது, ஆடலும் பாடலும் குடும்பங்களில் தாராளமாக நடைபெற வேண்டும். அப்போது பயிற்சி முறையில் சீர்திருத் தமும் நாம் சொல்லாமலே நடைபெறும் என்கிறீர்."

"இது என்னுடைய அபிப்பிராயம்" என்ருர் மாவடித்துறை ஐயர்வாள்.

# சர்மாவின் கோபம்

[சர்மா ஐ. ஸி. எஸ். மேஜைக்கு எதிரே நாற்காலியில் உட்கார்ந்து காலை போஜனம் செய்து கொண்டிருக்கிறார்.]

**சர்மாவின் மனைவி ஜானகியம்மாள்:** இதோ ஸர்க்கார் உத்தரவு!

**சர் :** வந்துவிட்டதா? பிரமாத பர்மிட்! மனுச்செய்து ஒரு மாதம்தானே ஆகிறது, அடடா! தேவலையே! ரொம்பச் சுறுசுறுப்பு! ஹூம் அந்த பிரிட்டிஷ் நிர்வாகந்தான்! வேலை தெரியும் அதற்கு! இந்த 'அப்ஸ்டார்ட்' துரைத்தனத்துக்குக் சதா தற்புகழ்ச்சிக்குத்தானே நேரம் இருக்கிறது! வேலை செய்யப் பொழுது ஏது?

**ஜா :** ஒரு யூனிட்டுக்குப் பர்மிட் உத்தரவிட்டிருக்கிறார்கள்.

**சர் :** என்ன! ஒரு யூனிட்டா? நான் நாலுக்கல்லவா போட்டிருந்தேன்?

**ஜா :** (படிக்கிறாள்) 'சர்க்கார் மனுவை நன்றாகப் பரிசீலனை செய்துள்ளார்கள். மதுவிலக்குச் சட்டம் ஏற்படுவதற்கு முன்பு மனுதாருக்கு மதுபானப் பழக்கம் உண்டாக்கிவிட்டது என்பதையும், அவருடைய தற்போதைய வயதும் உடல் நிலையும் காரணமாக அந்த வழக்கத்தை மாற்றிக் கொள்ளுவது கஷ்டம் என்பதையும் அநுதாபத்

தோடு சீர்தூக்கிப் பார்த்து ஒரு யூனிட்டுக்குப் பர்மிட் வழங்கும்படி சர்க்கார் உத்தரவு பிறப்பிக்கலானார்கள்!'

சர் : அடே! என்ன திமிர்! நான் என்னத்தை எவ்வளவு உட்கொள்ள வேண்டும் என்று உத்தரவு போட இவர்கள் யார்?...இந்த ஆஷாட பூதிகள்! அட்டகாசம்! அட்டகாசம்! இதைப் பொறுக்க முடியாது!

[கோப்பையை உடைத்து விடுகிறார்]

ஜா : இதோ பாருங்கள். நீங்கள் இந்தமாதிரி கோபத்தில் இறங்கக்கூடாது என்று டாக்டர் எச்சரித்திருக்கிறார் இல்லையா?

சர் : கெட்டார் அந்த டாக்டர்! இது இன்னொரு கொடுமை, இந்த டாக்டர்களின் அட்டகாசம். அவர் இங்கே வந்து என்னுடைய ரத்தத் துடிப்பை எடுப்பது, ஒன்றும் இல்லாததற்கு எல்லாம் வீட்டில் எல்லாரையும் கவலைப்படுத்துவது—இதெல்லாம் எனக்குப் பிடிக்கவே இல்லை.

ஜா : நாங்கள் ஒன்றும் கவலைப்படவில்லை. கலங்கிப் போகவில்லை. ஆனால் அவர் சொல்லுவதை அசட்டை செய்து விடுவதா? ஏதோ காரணம் வைத்துத்தான் சொல்லுகிறார். நாம் நிச்சயம் கவனமாகத்தான் இருக்கவேண்டும். ஏதாவது தப்புத் தவறு நேர்ந்துவிட்டால், என்ன ஆவது? உங்கள் பென்ஷன் ஒன்றைத்தான் நாங்கள் எல்லாரும் நம்பியிருக்கிறோம்.

**சுசீலா:** (சர்மா அவர்களின் மகள்) இந்தா அம்மா, எப்பொழுதும் பயங்கரமான விஷயங்களையே பேசிக்கொண்டிருக்காதே!

**சர்:** ஹரிஹரன் எப்படியிருக்கிறான்? அவனையாவது இந்தப் பிச்சைக்கார சர்க்கார் நன்றாக நடத்துகிறார்களாமா?

(ஹரிஹரன் சுசீலாவின் கணவன் — ஐ. ஏ. எஸ். உத்தியோகஸ்தர்)

**ஜா:** மாப்பிள்ளை நன்றாகத்தான் இருக்கிறார். இப்பொழுது 'பப்ளிக் ரிலேஷன்ஸில்' போட்டிருக்கிறார்களாம்—அந்தஸ்தையும் உயர்த்தி—

**சர்:** பப்ளிக் ரிலேஷன்ஸா? அப்பப்பா! இப்பொழுதான் எத்தனை எத்தனை இலாகாக்கள்!—எல்லாம் அவர்களுடைய 'மாமன் மச்சானு'க்கு உத்தியோகம் கொடுக்கத்தான்!

**ஜா:** சரியாய்ப் போயிற்று! ஹரிஹரன் உங்களுடைய மாப்பிள்ளையாக்கும்! அவர்களுடைய மாமன் மச்சான் இல்லையே!

**சர்:** சரி, சரி. உளறாதே! கொஞ்சம் ஹரியைக் கவனித்துக்கொள். 'பார்ட்டிகள் எல்லாம் அவனுக்கு இப்பொழுது அதிகமாகிவிட்டதாம்! தெரிந்ததா? 'பார்ட்டி'களில் குடிப்பழக்கம் பிடிக்காதபடி சுசீலாதான் அவனைப் பார்த்துக் கொள்ள வேணும்.

**சுசீ:** அவர்தானே — பெரிய பெரிய மனிதர்களை உபசரித்துக் கவனித்துக்கொள்ள வேண்டியதிருக்கிறது. விருந்துகள் இல்லாமல் 'பப்ளிக்

ரிலேஷன்ஸ்' எப்படி அவர்களோடு கொஞ்சம் பானத்தில் சேர்ந்துகொள்ளாமல் விருந்து எப்படி நடத்துவது? விருந்தாளிகளை எப்படிச் சந்தோஷப்படுத்த முடியும்?

சர்: ஆனல் சர்க்கார் இந்த விருந்துகளுக்குப் பணம் தருகிறார்களா?

சுசீ: அதற்கு ஒன்றும் 'அலவன்ஸ்' கிடையாது! ஆனல் உத்தியோகத்தில் நல்ல வேலை செய்து காண்பிக்க வேண்டுமோ, இல்லையோ? உபசரிப்பு நடத்தாமல் நல்ல பெயர் கிடைக்குமா?

சர்: பார், பார்! உங்கள் புது சர்க்கார் என்ன செய்கிறது என்று! சரியான சம்பளம் கிடையாது. ஆனல் சிப்பந்திகள் எல்லாம் தேச பக்தர்கள் மாதிரி உழைக்க வேண்டுமாம்! தேசமாம், பக்தியாம்! வெறும் பித்தலாட்டம்!

ஜா: இதோ பாருங்கள். அப்பாவும் தாத்தாவும் எப்படியோ அப்படித்தான் பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் ஆவார்கள்! நான் தினமும் அவர்கள் எதிரில் செய்வதை அவர்களைச் செய்ய வேண்டாம் என்று எப்படிச் சொல்லுவது?

சர்: தர்மோபதேசம் போதும்! நிறுத்துங்கள்! இந்தத் தில்லுமுல்லெல்லாம் குழந்தைகள் செய்யாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். அவ்வளவுதானே?

ஜா: எப்படியானலும், சிறுவர்களுக்கு மதுபானச் சரக்குக் கிடைப்பது கஷ்டமாக சர்க்கார் பண்ணி வருவது ரொம்ப நல்ல காரியமில்லையா?

**சர் :** ஆமாம்; ஒப்புக்கொள்கிறேன். விவாதத்தில் என்றைக்குமே நீ கெட்டிதான்! ஆனால் என்னைப் போய் இதைச் சாப்பிடு, இதைச் சாப்பிடாதே, இதைக் குடி, இதைக் குடிக்காதே என்று கட்டா யப்படுத்துகிற இந்த சர்க்கார் முட்டாள்தனம் எனக்குச் சகிக்க முடியவில்லை! முழு கம்யூனிஸ்டு களே தேவலை! நான் அதை வரவேற்பேன்!

**ஜா :** நான் உங்களோடு வாதாடவில்லை. உங்களுக் குக் கோபந்தான் வருகிறது. இப்பொழுது ஹரி ஹரனிடம் என்ன சொல்வது? முடிவில் இந்தப் பழக்கம் அவனையும் பற்றிப் பிடித்துக்கொள் ளும் என்றே பயமாக இருக்கிறது.

**சர் :** அது நமக்குத் தெரியாது. சுசீலாபாடு. அவள் புருஷன்பாடு.

(ஹரிஹரன் கையில் ஒரு பத்திரிகையோடு பரபரப் புடன் வருகிறார்.)

**ஹரி :** தெரியுமா சமாச்சாரம்! ஆந்திராவில் மது விலக்கை ஒழித்துக்கட்டிவிட ஓட்டுச் செய்து விட்டார்கள்! ஹும்! அருமையான செய்தி!

**சர் :** என்ன, என்ன! இது ஒரு நல்ல செய்தி என்று நீ நினைக்கிறாயா?

**ஹரி :** ஆமாம்! கட்டாயத்தினால் ஒரு விஷயத்தை வற்புறுத்துவது முட்டாள்தனம். ஆந்திராவில் இதை உணர்ந்து காரியம் செய்திருப்பதுபற்றி எவ்வளவோ சந்தோஷம்!

**சர் :** அதென்னவோ எனக்குத் தெரியவில்லை. 'வற் புறுத்தல்' என்று எதைச் சொல்லுகிறாய்? சர்க்

காருக்கு வரும் வருமானத்தை உத்தேசித்துக் கடை வைத்து ஏழை மக்களுக்கு ஆசை காட்டு வது 'வற்புறுத்தல்' இல்லையா? ஒன்று சொல் கிறேன். ஹரி, மதுபானம் இளைஞர்களுக்கு அபாயம். அவர்கள் ஏமாந்து போகும்படி விடக் கூடாது. மதுவிலக்குச் சட்டம் எனக்கு ரொம்பப் பிடிக்கிறது. மதுவிலக்கு என்பது வலையில் வீழ் வதிலிருந்து தடுப்பதுதானே?

ஹரி: எனக்கு இந்தத் தத்துவம் எல்லாம் புரிய வில்லை! சர்க்கார் வருமானம் என்ன ஆவது?

சர்: இதோ பார், பைத்தியக்காரத்தனமாய்ப் பேசாதே. ஜனங்களைக் கள்ளிலும், சாராயத்தி லும் கொண்டுபோய் பணத்தைக் கொட்டும்படி செய்வது சர்க்கார் வருமானத்துக்கு ஒரு வழியா? நீதி இலாகாவில் பத்து வருஷம் நான் இருந்தது சும்மா போகாது தெரியுமா? இந்தப் பொய் வாதம் எல்லாம் நன்ருகத் தெரியும் எனக்கு!

ஹரி: மாமா, நீங்கள் பேசுவது புதிதாக இருக் கிறதே? என்ன நேர்ந்தது?

சர்: ஒன்றும் நேரவில்லை. இனிமேல் பர்மிட் வேண் டும் என்று நான் கேட்கப்போவதில்லை. அந்த விஷயமே நமக்கு வேண்டியதில்லை!

ஹரி: அப்படியானல் டாக்டர் சொன்னது?

சர்: ஓ! டாக்டரா! (சிரித்துக்கொண்டே) அவர் சொன்னர். இந்த மது விஷயமே எனக்கு நல்ல தில்லை என்று! அவருக்குச் சரியானபடி 'பீஸ்'

கொடுத்தேன். அவர் 'சர்டிபிகேட் கொடுத்தார். லேசாகக் குடித்தால் என் உடம்புக்கு நல்லது என்று எழுதினர். எது நோய் செய்ததோ அதையே மருந்தாக எழுதிக்கொடுத்தார்! நம்முடைய குடும்ப டாக்டர் அபிப்பிராயமும் நான் சொல்லுகிறபடிதான்.

ஹரி. என்ன! ஏதேதோ வியாதிகள் பெயர்களையெல்லாம் 'லாடின்' பாஷையில் எழுதி உங்கள் உடம்புக்குக் கொஞ்சம் மதுஸாரம் ரொம்ப அவசியம் என்று குறித்திருந்தாரே!

சர்: ஆகா! தெரியுமே அதற்கு எவ்வளவு விலை என்பது பணம் கொடுத்தவனுக்கல்லவா தெரியும்?—எனக்கு பர்மிட் வேண்டியதில்லை.

ஜா: ஹரி, அவரோடு வாதாடாதே! மாமா தீர்மானம் குடும்பத்துக்கே நல்லது.

சுசீ: எனக்கும் அப்படித்தான் படுகிறது.

ஹரி: ஊஹுூம். தீர்மானமான முடிவுக்கு வருவதற்கு முன்னல் இன்னும் கொஞ்சம் யோசிக்க வேண்டும்.

சர்: யோசிப்பதா?—இல்லை. அது முடிவான விஷயம்

ஹரி: ஆனல் நீங்கள் ராத்திரி தூங்க முடியாமல் இருப்பதும். உங்கள் நெஞ்சு படபடப்பதும் என்ன ஆவது?

சர்: அதன் விஷயம் எனக்குத் தெரியும். இரவு கொஞ்சம் உபாயமாகச் சாப்பிட்டுவிட்டுப் படுத்தால் இந்தக் கோளாறு வராது! கொஞ்சம்

பசியாக இருக்கும். ஆனால் சரியாகத் தூங்கி முழித்துவிடுவேன்.

ஹரி: பர்மிட்டை விட்டுவிடுவதற்கு முன்பு டாக்டரை ஒரு வார்த்தை கேட்டுவிடுவது நல்லதல்லவா?

சுசீ: ஆனால் பர்மிட்டிலே போட்டிருப்பதற்கு மேல் வாங்க முடியாதே. அதை வைத்துக்கொண்டு! ஒரு 'யூனிட்'தானே கொடுக்கிறார்கள்?

ஹரி: ஓ! பரவாயில்லை. அதற்கெல்லாம் வழி உண்டு.

சர்: இல்லை. ஹரி! அதெல்லாம் நடவாது. நான் பழைய காலத்து ஆள். குடிக்கிறேன் என்றால், அதை வெளியே சொல்லுவேன். சொல்லிக் கொள்ள வெட்கமோ பயமோ என்றால் குடிப்பதையே நிறுத்திவிடுவேன்! எனக்கு வைராக்கியம் உண்டு. நான் தீர்மானித்தபடி ஒன்றைச் செய்ய அல்லது செய்யாமல் இருக்க! எனக்குப் புரட்டு, பித்தலாட்டம் எல்லாம் பிடிக்காது.

ஹா: ரொம்ப சரி, ரொம்ப சரி.

சுசீ: (புருஷனைப் பார்த்து): அதுதான் சரி!

ஹரி: சரி, சரி! என் கட்சி தோல்வி!

சர்: நம் ஊர்க்காரன் ஒருவன் வந்து வாய்த்திருக்கிறானே செக்ரடரி—அவனுக்கு இப்பொழுதே 'டோஸ்' கொடுத்து ஒரு கடிதம் எழுதப் போகிறேன்—இந்தக் காலத்து அதிகாரிகள் எல்லாரும் மேலதிகாரியைப் புகழ்ந்து, புகழ்ந்து 'ஆமாம்' போடுகிற ஆசாமிகளாக அல்லவா இருக்கிறார்கள்!

சுசீ : (சிரித்தவாறு கணவனைப் பார்த்துக்கொண்டே) இங்கேயுள்ள அதிகாரிகளைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் அப்படித்தான்.

சர் : இந்த பர்மிட்டை எனக்கு வேண்டாம் என்று சொல்லிவிட்டு ஒரு சூடான கடிதம் எழுதப் போகிறேன். (போகிறார்)

ஹரி : அப்பா சட்டுச் சட்டென்று தீர்மானத்துக்கு வருவார். அத்தனை சீக்கிரம் மாறியும் விடுவார்!

ஜா : ஹூம்! அவருக்கு ஒரு காலத்தில் எவ்வளவு வைராக்கியம் இருந்தது! பிடித்த பிடியாக இருந்தாரே அந்தக் காலத்தில்!

சுசீ : இந்த மதுபானம் தான் வைராக்கியத்தைக் கெடுத்துவிடுகிறது என்று டாக்டர்கள் சொல்லுகிறார்களே!

ஹரி : மண்ணாங்கட்டி! எத்தனையோ வைராக்கிய மன்னன்களையெல்லாம் பார்த்திருக்கிறேன். நன்றாகக் குடிப்பார்கள்; நன்றாகவே இருப்பார்கள். ஏதோ சில்லரைப் பத்திரிகைகளைப் படித்துவிட்டுப் புத்திசாலியாகிவிடப் பார்க்காதே!

சுசீ : மற்றவர்கள்தான் பெரிய புத்தகங்களைப் படிக்கிறார்களா? கொண்டு வந்து பீரோவில் அலங்காரமாகத்தானே வைத்திருக்கிறார்கள்!

ஹரி : நல்ல போடு போட்டாயடியம்மா! பேஷ் இனிமேல் நமக்குள் சச்சரவு வேண்டாம்! அப்பா தீர்மானம் செய்கிறார். ஆனால் அவரால் நிறைவேற்ற முடியாது என்று எனக்குத் தெரியும்!

ஜா: நாம் அவருக்கு மனோபலம் தந்து ஒத்தாசை செய்ய வேண்டுமே தவிர, இப்படியெல்லாம் அதைரியப்படுத்தக் கூடாது. நல்ல முடிவுகள் செய்து தெய்வத்தை நம்பினால் ஒருபொழுதும் கடவுள் நம்மைக் கைவிடமாட்டார்.

ஹரி: அதாவது, கடவுள் என்று நீங்கள் அழைக்கிற ஒருவர் இருந்தால்......?

சுசீ: இந்த மாதிரியெல்லாம் நாஸ்திகம் பேசாதீர்கள். நாமே இந்தப் போக்கிலே போனால் நம் குழந்தைகள் என்ன ஆகும்? உங்கள் திருக்கூட்டம் எல்லாம் யாராவது 'ஸயன்டிஸ்ட்' என்று பெயர் வைத்துக்கொண்டு சொன்னால் எதையும் நம்பிவிடுவீர்கள்! எனக்கென்னவோ கடவுள் என்கிற நம்பிக்கைதான் பிடிக்கிறது. காணாததெல்லாம் இல்லை என்று சொல்லிவிடலாமா?

ஹரி: நீ சொல்வது சரியாக இருக்கலாம் என்று நினைக்கிறேன். இப்போது அணுவுக்குள் பெரும் சக்தியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். மனித உள்ளத்திலும் அதிசய சக்திகள் இருக்கலாம். உலகம் அளாவிய சக்தியின் அலைகள் எங்கேயெல்லாமோ இருக்கலாம். என்னவெல்லாமோ செய்யலாம்!

ஜா: அலைகளோ, கிலைகளோ! தெரியாது. ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரியும். குடிப்பது அறிவைக் கெடுத்துவிடுகிறது. அந்தக்காலத்தில் அவர் எப்படி இருந்தார் தெரியுமா!

முற்றும்



